

**பகல் கண்டேன் நாரணனைக் கண்டேன்—கனவில்**
**மிகக் கண்டேன் மீண்டவனை மெய்யே மிகக்கண்டேன்**
**ஊன் திகழு நேமியொளித் திகழுஞ் சேவடியான்**
**வான் திகழுஞ் சோதி வடிவு**

—இரண்டாம் திருவந்தாதி—81

*இராக்காலம் கலவாமல் ஒரே பகற்பொழுதாய்ச் செல்லுகிற நல்விடிவைக் கண்டேன்; அதாவது ஸ்ரீ மந்நாராயணனாகிற என்றும் அஸ்தமிக்காத ஆதித்யனைக் கண்டேன். இன்னமும் மாநஸ ஸாக்ஷாத்காரத்திற் காட்டிலும் மிகவும் ப்ரத்யக்ஷமாக அவனைக் கண்டேன். திருமேனியில் விளங்குகின்ற திருவாழியை உடையவனும், பிரகாசம் மிக்க திருவடிகளை உடையவனுமான அப்பெருமானுடைய பரமபதத்திலே விளங்குகின்ற சோதி மயமான வடிவத்தை இங்கே நன்கு ஸேவிக்கப்பெற்றேன்.*

# ஸப்தகிரி

## அக்டோபர் - 1990

தனிப்பிரதி ரூ. 1 — மலர் 21

வருடச் சந்தா ரூ. 12 — இதழ் 5


## உள்ளுறை





### அட்டைபபட விளக்கம்

முனனட்டை : 'வடிவார் சோதி வேங்கடவன்'

கே. ஜெகதீஷ்

2, 3 பக்கங்களில் : திருமலை, திருப்பதி மற்றும் திருச்சானூர் திருக்கோயில்களுக்கு அண்மையில் இந்தியத்துணைக் குடியரசுத் தலைவர் டாக்டர். எஸ். சங்கர்தயாள் சர்மா அவர்கள் வருகை புரிந்த போது

பின்னட்டை : "ஒளிப்பாவை"
போட்டோ :-கோவை. சீதாராம்


சிறப்பாசிரியர்.
திரு. எம். வி. எஸ். பிரஸாத், I.A.S.,
செயலாட்சித் தலைவர்,
தி.தி.தேவஸ்தானம், திருப்பதி.

ஆசிரியர்.
திரு. கே. சுப்பாராவ், எம்.ஏ.

துணையாசிரியர்:
திரு. என். எஸ். ராமமூர்த்தி, எம்.ஏ.,

அச்சிடுபவர்
திரு. எம். விஜயகுமார் ரெட்டி,
மேலாளர்,
தி.தி. தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.

பிரதிகளுக்கு:
EDITOR,
"Sapthagiri"
T. T. Devasthanams,
TIRUPATI.




# உங்களுடன் . . . .

பெண்மை எங்கு வாழ்த்தப்படுகின்றதோ, போற்றப்படுகின்றதோ, அவ்வாழ்த்தும் போற்றும் சமுதாயம் மேன்மை அடைகின்றது. எங்கு, என்று அப்பெண்மைக்கு இழுக்கு நேருகின்றதோ அதற்குக் காரணமான சமுதாயம் நரகத்திற்கு மறுபெயராகின்றது. இது இம்மண் காட்டிட்ட உண்மை; இம்மண்ணில் விளைந்த சரித்திரம் புகட்டிட்ட செய்தியுமாகும். இருபது வயதில் கழுத்து நீட்டிட்ட ஒரே காரணத்திற்காக, அடுத்த நாற்பது ஆண்டுகளுக்கு - சராசரி ஒரு மனிதனின் வாழ்க்கைப் பயணக் காலமான அறுபது ஆண்டுகள் வரை, கொண்டவனின் நிறம் மாறினாலும், குணம் திரிந்தாலும், உருவம் சிதைந்தாலும், அவனால் மொத்துண்டாலும், வசைக்குள்ளானாலும் பெண்கடமையிலிருந்து வழுவாமல், தாய்மையிலிருந்து தவறாமல் விளங்கிடும் ஒரு சராசரி இந்தியப் பெண்ணை மணந்திடும் ஒவ்வொரு ஆணும் இம்மண்ணில் பிறந்தமைக்குப் பெருமை கொள்ள வேண்டும்.

தாயென்றும், சகோதரி என்றும், மனைவி என்றும், மகளென்றும் ஒரு பெண்ணானவள் ஒரு ஆணுடைய வாழ்க்கையில் பல நிலைகளில் விளங்கிடும் சிறப்பினைக் கொண்டே நாட்டையும், நீரையும், பூமியையும், மொழியையும் பெண்மையிற் வைத்துப் போற்றினர் போலும்! ஓர் ஆணின் சரிவு ஒரு குடும்பத்தைச் சாய்த்திடும், ஒருபெண்ணின் சரிவு ஒரு சமுதாயத்தைச் சீரழித்திடும். அன்பினால் திருத்திய மங்கையர்க்கரசியும், ஆடலால் திருத்திய குமுதவல்லியும், அழகால் திருத்திய ரத்னாவும், கடமையால் திருத்திய அரசமாதேவியும், பாசத்தால் திருத்திய திலகவதியாரும், இச்சமுதாயத்தை மேம்படுத்திடும் மங்கையர்களுக்கு ஒரு சில முன்னுதாரணங்களாவர். ‘கடவுளர்களை எல்லா இடங்களில் படைக்க முடியாது; அதனால்தான் தாய்மார்களைப் படைத்தான்’’ என்பது யூதப் பழமொழி ஒன்று பகரும் உண்மை.

குடும்பம் ஓர் ஆலமரமென்றால், அம்மரத்தின் கிளைகளும், இலைகளும் கணவன் உள்ளிட்ட பல உறவுகளாக விளங்கிட, மரத்தின் ஆணிவேராக அமைபவள் அக்குடும்பத்தின் தலைவியாவாள். இலை பழுத்தாலோ, கிளை முறிந்தாலோ மரம் பட்டுவிடாது. ஆனால் வேர் பழுதுபட்டால் மரம் சாய்ந்துவிடும். ஆம் மனைவி எனும் மங்கை நல்லாள் ஒருவளால் மட்டுமே குடும்பம் தலைநிமிர்ந்து நடந்திடும்.

இயற்கையின் பின்னணியில் இவ்வுலக உயிர்கள் இயங்குவதால்தான், இயக்கும் அச்சக்தியை அன்னையாக - சாகம்பரியாக தேவிமகாத்மியமும், ‘‘மாயாபூமி: புத்ரோ அஹம் பிருத்வியா:’’ என்று குறிப்பாக பூமியை அன்னையாக அதர்வ வேதமும் அழைக்கின்றன. ‘‘குபுத்ரோ ஜாயேத குவச்சதபி குமாதா ந பவதி’’ என்ற கூற்று ‘‘கொடிய மகன் ஒருவன் இம்மண்ணில் நடமாடலாம், ஆனால் கொடிய தாய் எனும் ஒருவள் இருக்க மாட்டாள்’’ என்று தெரிவிப்பதிலிருந்து, தாய்மையின் பெருமை சுட்டப்படுகின்றது.

பெண்ணின் அறிவையோ, திறமையையோ, வீரத்தையோ வேத உபநிஷத்துக்களோ, இதிஹாஸ புராணங்களோ மற்றும் இந்திய இலக்கியங்களோ, வரலாறோ என்றும் குறைத்து மதிப்பிட்டதில்லை. அவ்வாறு ஒரு குறை இம்மண்ணில் இருந்திருந்தால் ஞானச் சுடர்களான அபாலா, கார்கி, மைத்ரேயி போன்றோரும், தத்துவ முத்துக்களான ஆண்டாள், மீரா, காரைக்காலம்மையார் போன்றோரும், வீராங்கனைகளான ஜான்சி, பத்மினி, ருத்ரம்மா, சம்யுக்தா போன்றோரும் தோன்றியிருக்க மாட்டார்கள். ஆண்மைக்குச் சரி சமமாக பெண்மை வணங்கப்பட வேண்டும் என்பதற்காகவே பிரமன் கலைமகளை தன் நாவிலும், மாதவன் திருமகளை தன் இதயத்திலும், மகாதேவன் மலைமகளை தன் உடலொரு பகுதியாகவும் கொண்டு விளங்கினர்.

இந்து சமயத்தின் இரு கண்களாகப் போற்றப்படும் இராமாயணமும், மகாபாரதமும் முறையே சீதை, திரௌபதி எனும் இரு பெண்கள் சம்பந்தப்பட்டே படைக்கப்பட்டாலும், ரம்பையின் சாபத்திற்குப் பின் பிற மகளிரைத் எண்ணாத இராவணன் தன் தங்கையின் பொருட்டே, இராமனைப் பழி வாங்கவே சீதையை சிறையெடுத்தான். பெண்மையின் திண்மைக்குப் பயந்தே ஜானகியிடமிருந்து எட்டியிருந்து, உடன் பிறந்தோரும், உள்ளம் புகுந்தாளும் கற்பின் கனலியின் பெருமையைக் கூறித்தடுத்தும், மானிடனின் மாண்பினை மறந்தும் தொழச்சிக்காதவனாய் இராவணன் தன் நிலை திரிந்து தடுமாறினான் திரௌபதி தன்னைப் பார்த்து எள்ளி நகையாடினாள் என்பதால்தான் துரியோதனன் அவள்மீது பகைமைப் பாராட்டினான்என்றும், சபையில் அவள்தம் மானத்தினை மாசுபடுத்தினான்என்றும் பலர்கூறினாலும் பதவி மோகத்தால் பாண்டவர்மீது பகைமைப் பாராட்டிய துரியோதனன் திரௌபதியை ஒரு கருவியாகக் கொண்டு, ஐவரையும் ஒருங்கே, அவர்களது உயிர் பிரியும் வரை நினைந்து நினைந்து வேதனை கொள்ளுமாறுச் செய்து, பகைமையை மேலும் பெரிது படுத்தி, அவர்களைப் பழி தீர்த்துக் கொள்ளவே என்று கூறுவதே சாலப் பொருத்தமாகும். அண்ணன்மீது வைத்த பாசத்தால், துகிலுரித்ததை ஒரு கட்டளையாகக்கொண்டு செயற்பட்டதுச்சாதனன் உள்ளிட்ட நூற்றுவரும், திரிதராட்டினன், சகுனி போன்ற முக்கியப் பாத்திரங்கள் எவரும் எங்கும் பெண்மையைக் காம மனங்கொண்டு மாசு படுத்தவில்லை என்றே கூற வேண்டும்.

இவ்வாறு புகழப்பட்ட, பெருமைப்படுத்தப்பட்ட பெண்மையின் நிலமை இன்று என்னானது? வரதட்சணையைப் பற்றிப் பேசாத, உடன்கட்டையினைப் பற்றிப்புகழாத இம்மண்ணில் பல பெண்கள் தீக்குத் தீனியாவதேன்? பெண்களால் பெருமைப்படுத்தப்படும் ஆணினம் அப்பெண்மைக்குச் சிறப்பு சேர்க்காமல் பெண் இனத்தை பேதலிக்க விடுவதேன்? அபலையின் கண்ணீர்த்துளிகள் அவளதுபலவீனமாகக்கொண்டு, அவை அவளுடைய பொறுமைக்கு வைக்கப்படும் முற்றுப் புள்ளிகள் என்பதை மறந்ததேன்? அக்கண்ணீரே திராவகமாக மாறினால் உலகம் என்னாகும் என்பதைக் கண்ணகி நிருபித்துக் காட்டியதையும் ஆணினம் மறக்கநேர்ந்தால் விரைவில் ஒவ்வொரு வீடும் மதுரையாக எரியும் என்பதைத் தவறு செய்யும் ஆணும், அதனைத் தடுத்துநிறுத்த முன்வராத ஆணும் நினைக்கத் தவறினால் ‘‘ஆவதும் பெண்ணாலே’’ என்பது மறக்கப்பட்டு, ‘‘அழிவதுபெண்ணாலே’’ எனும் கூற்றுத்தான் இறுதி வரை நிலைத்திடும்.

# செய்திச் சுருக்கம்

சிறப்பமைப்புக் குழு முடிவுகள் :

அண்மையில் திருமலையில் தி. தி. தே. சிறப்பமைப்புக் குழுக் கூட்டத்தில் சில முக்கிய முடிவுகள் மேற்கொள்ளப்பட்டன.

செப்டம்பர் மாதத்தில் திருமலையில் நடைபெற்ற பிரம்மோத்ஸவத்தின்போது நாளும் சுமார் 15,000 யாத்திரிகர்களுக்கு இலவச உணவு வழங்கிட்டதற்குத் தகுந்த ஏற்பாடுகள் மேற்கொள்ளப்பட்டன.

ஃ ஃ ஃ

சித்தூர் மாவட்டம் கார்வேட்டு நகரத்தில் ரூ. 18 இலட்சம் செலவில் தி. தி. தே. திருமண மண்டபம் ஒன்று கட்டப்படும். நாராயண வனத்தில் ரூ. 8 இலட்சம் செலவில் மற்றொரு திருமண மண்டபம் ஒன்றும் கட்டப்படும்.

ஃ ஃ ஃ

திருமலையில் நாராயண கிரி விருந்தினர் விடுதி கட்டிடத்திற்கு அருகே ரூ. 3.25 கோடி செலவில் அரும்பொருட்காட்சி யகத்திற்கான புதிய கட்டிடம் ஒன்று கட்டப்படும்.

ஃ ஃ ஃ

திருமலையில் குடிநீர் வசதிகளை நன்கு மேற்கொள்ளும் வகையில் புதிய திட்டங்களைச் செயலாக்கிட ரூ. 17.88 இலட்சம் ஒதுக்கப்பட்டுள்ளது.

ஃ ஃ ஃ

காஞ்சி காமகோடி பீடம் ஸ்ரீ பரமாச்சார்யார் சுவாமிகளின் ஆலோசனைப்படி சித்தூர் மாவட்டம் நகரியிலுள்ள புக்கா கோயிலை தி. தி. தே. மேலாண்மை ஏற்றுக்கொள்வதென்றும், வியாஸாஸ்ரமம் உள்ள கோகர்ணம் தொப்போவனத்திற்குக் குடிநீர் மற்றும் சாலை வேயவும் தி. தி. தே. முடிவு செய்துள்ளது.

ஃ ஃ ஃ

கிருஷ்ண ஜெயந்தி :

திருப்பதியிலுள்ள தி. தி. தேவஸ்தானத்தாரின் ஸ்ரீ வேங்கடேஸ்வரா மாட்டுப் பண்ணையில் 14-8-90 அன்று "கிருஷ்ண ஜெயந்தி" விழா வெகுச் சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. அதுபோது ஆந்திர மாநில அறநிலையத்துறை அமைச்சர் திரு. மாகண்ட்டி ரவீந்திரநாத் சௌத்ரி அவர்கள் (தற்போது பதவி மாற்றஞ் செய்யப்பட்டுள்ளார்), தி. தி. தே. செயலாட்சித் தலைவர். திரு. எம். வி. எஸ். பிரஸாத் மற்றும் பல தேவஸ்தான உயர் அலுவலர்களும் பங்கேற்றனர்.

ஃ ஃ ஃ

திருமலையில் இந்தியத் துணைக் குடியரசுத் தலைவர்

இந்தியத் துணைக் குடியரசுத் தலைவர் டாக்டர். சங்கர் தயாள் சர்மா அவர்கள் தம் துணைவியாருடன் 24-8-90 அன்று திருமலைக்கு வருகை புரிந்தார். திருமலையில் தி. தி. தே. செயலாட்சித் தலைவர் திரு. எம். வி. எஸ். பிரஸாத், மக்கள் தொடர்பு அலுவலர் உள்ளிட்ட பல உயர் தேவஸ்தான அலுவலர்கள் டாக்டர். சர்மா அவர்களை கோயில் மரியாதைகளுடன் வரவேற்றனர். ஆந்திர மாநில பஞ்சாயத் துறை அமைச்சர். திரு. ஆர். செங்கா ரெட்டி, சித்தூர் மாவட்ட இணை ஆட்சியாளர் திரு. மதுசூதன் ரெட்டி, காவல் கண்காணிப்பாளர் திரு. ரமணமூர்த்தி ஆகியோரும் டாக்டர். சர்மா அவர்களின் வருகையின்போது உடன் இருந்தனர். பின்னர் துணைக் குடியரசுத் தலைவர் அவர்கள் அன்று நடைபெற்ற தீபாலங்கார சேவையினைக் கண்டுகளித்தார். அன்று மாலை திருமலையில் வைகுண்டம் 'க்யூ' கட்டிடத்திற்கு எதிரில் தி. தி. தேவஸ்தானத்தாரால் ரூ. 17 இலட்சம் செலவில் கட்டப்படவிருக்கும் 'யாத்திரிகர்கள் வசதி கட்டிட'த்திற்கு அடிக்கல் நாட்டினார். இக்கட்டிடத்தில் அமையவிருக்கும் சாமான்கள் வைப்புக்கூடத்தில் ஒரே நேரத்தில் 85,000 ஜதை காலணிகளையும், 16,000 பெட்டிகளையும் பாதுகாக்கப்படும் வசதி உள்ளது. பின்னர் தி. தி. தே. பிரசுரித்த சமய நூல்களை டாக்டர். சர்மா அவர்கள் வெளியிட்டார். அடுத்த நாள் மாலை 7 மணி அளவில் திருப்பதியிலுள்ள தி. தி. தே. தொழு நோய் மருத்துவக் கட்டிட வளாகத்தில் ரூ. 20 இலட்சம் செலவில் கட்டப்பட்ட 50 படுக்கைகளைக் கொண்ட 'தொழு நோயாளர் மறுவாழ்வு சீரமைப்பு மருத்துவ மனை'யினை திறந்து வைத்தார். அடுத்த நாள் திருச்சானூர் ஸ்ரீ பத்மாவதி தாயார் திருக்கோயிலுக்கு வருகை புரிந்தார்.

ஃ ஃ ஃ

பிரபல கர்னாடக இசை மேதை திருமதி. எம். எஸ். சுப்புலட்சுமி அவர்கள் தான்பாடி பதிவு செய்யப்பட்ட 'ஸ்ரீ வேங்கடேஸ்வர சுவாமி சுப்ரபாதம்' மற்றும் 'பாலாஜி பஞ்ச ரத்ன மாலா' ஒலிப்பேழைகளின் ராயல்டி மூலம் தனக்குக் கிடைத்த ரூ. 20 இலட்சத்தினை தி. தி. தேவஸ்தானத்திறகு வழங்கியுள்ளார்.

ஃ ஃ ஃ

ஜபயக்ஞம் :

உலக அமைதி, மேன்மை மற்றும் நலவாழ்வுக்காக சென்னையைச் சார்ந்த "ஸ்ரீ விஜய கணபதி விஷ்ணு ஸகஸ்ரநாம ஜபயக்ஞம் அறக்குழு' வின் சார்பில் திருமலையில் ஆறா

(48-ஆம் பக்கம் பார்க்க)



ருக்மணி - சத்யபாமா - செங்கமலத் தாயார் - ஸ்ரீ ராஜகோபாலஸ்வாமி
சன்மிஷ்டை

# வழிபாடு


கவிஞர். சோமசுந்தரப்பெருமாள்,
தங்கவயல்


வழிபாடு சிறப்படைந்தது என்று கூறக்கேட்டு இறை வழிபாடு அல்லது இறைவனை வணங்கியது என்ற பொருளுக்கு நாம் தலைப் பட்டு விடுகிறோம். இந்த வழிபாடு எனும் வாக்கு எப்படி வந்தது? ஏன் வந்தது என்பதைசற்று நாம் சிந்திக்க வேண்டும்.

வழிபாடு என்றால் பெரியோர்கள், முன்னோர்கள், ஞானிகள், மகான்கள் காட்டிய வழியைப் பின்பற்றிச் செல்வது என்பது பொருள். வழியறியா ஒருவனுக்குத் தெரிந் தவன் வழிகாட்ட அடுத்தவன் அதைப் பற்றிச் செல்வதனால் ஊர் போய்ச் சேர்கிறான். அதுபோல ஞானமார்க்கத்துக்கு வழிகாட்டுபவர் களை நாம் பின்பற்றிச் செல்லு வோமேயானால் வீடு பேறு அடைகி றோம். சில வழிகளிலே முள் நிறைந் திருக்கும், சில வழிகள் கரடு முர டாய் இருக்கும், சில வழிகளில் கள் வர் நிறைந்திருப்பர். சில வழிகளில் பேய் பிசாசுகள் பயம் இருக் கும். இவற்றினைக் கடந்து நல்லவழி யில் செல்ல எப்படி வழிகாட்டி தேவையோ அதுபோல்தான் பிறவிப் பெருங்கடல் கடந்து ஞானத்தைப் பெற குருமகான்கள் தோன்றினார் கள். இறைவன் ஏதோ உருவத்தில் வருவதைவிட குரு உருவத்தில் வரு வதே சிறந்தது; வரவேற்கப்பட்டது என்பது கண் கூடு. எனவேதான் அருணகிரி நாதர் கூட "குருவாய் வருவாய் அருள்வாய் குகனே" என்கி றார்.

எனவே குரு வழிகாட்ட நன்னெறி யைப் பற்றி ஒழுகுகின்றவர்களுக்குத் துயர் வராது. "வழிபடும் அடியார் துயர்களைவோனே" என்கிறார் அரு ணகிரிநாதர். அந்த நல்வழியில் சென்று இறைத்தொண்டு செய்வ தற்கு எங்கள் பரம்பரை ஈடு படு வோம் என்று ஆழ்வார் பெருந்தகை "வழிவழியாய்வந்து ஆட்படுத்து கின்றோம்" என்று குறிப்பிடுகிறார். இவ்வழிபாட்டிலே ஒன்றி நினைப்ப வர் மனத்தை கோயிலாகக் கொள் ளும் இறைவனிடம் இதயத்தை ஒப்பு வித்துவிட்டால் அப்பக்தனுக்கு இறை வன் அடிமையாகும் காட்சிகளையும் நாம் காண முடிகிறது. பிட்டுக்கு மண் சுமந்த கதை, பிரம்படிப்பட்ட கதை, தொண்டருக்குத் தூதுசென்ற கதை, சிறப்புடைய பக்தனுக்கு சேவகம் செய்த கதை, மன் னன் முடிதுறந்த கதை, மன்னன் கள்வன் ஆன கதை, பக்தனை சிறை மீட்ட கதை என்று எத்தனையோ ஏடுகளில் அடங்கிக் கிடப்பதை அள விட முடியும். அத்தனைக்கும் ஆதா ரம் எது என்று தேடும்போது வரும் விடை பக்தி வழிபாடுஎன்பது ஆகும்.

'மாதவா கோவிந்தா கேசவா என் மானம் காக்க உனையன்றி யாருளர்' என்று இரு கரம் குவித்து உயர்த்திய போது பாஞ்சாலியின் துகில் வளர்ந் தது. தூர்வாசமுனிவரால் தமக்குவர இருந்த பெரும் சாபம் கண்ணபிரா னால் நீங்கியது என்பதைச் சொல் வது பாஞ்சாலியின் பக்தி. முனிவ ருக்குச் சொந்தமான கனியை பாஞ் சாலியின் பிடிவாதத்தால் அர்ஜு னன் கொய்து விட, அத்தவறு உணர்ந்து கண்ணபிரான் அருளால் அக்கனி மீண்டும் சென்று மரத்திலே ஒட்டிக் கொண்டது பாண்டவரது பக்தியாலாகும்.

" பக்தியுடனின்று பக்திசெயும் அன்பர்
பத்திரம் அணிந்த கழலோனே "
" பக்தியால் யான் உனைப்
பலகாலும்
பற்றியே மாதிருப்புகழ் பாடி "
(திருப்புகழ்)

பக்தர்களது திருவடித் தாமரையை சூடிக்கொள்ள அல்லது வருடிக் கொள்ள விருப்பமுடையவராய்



தேவி சமேத தக்ஷிணாமூர்த்தி
சுருட்டப்பள்ளி—பி. கிருஷ்ணமூர்த்தி.

இறைவன் ஆகிவிடும் காட்சியை மேலே உள்ள வரிகள் படம் பிடித்து காட்டுகின்றன. "மாசில் அடியார்கள் வாழ்கின்ற ஊர் சென்று தேடி அங்ஙனே விளையாடி நின்றுவாழும் மயில் வீரனே செந்தில் வாழ்கின்ற பெருமானே" என்று அருணகிரிப் பெருமான் அடித்துச்சொல்வதைப் பாருங்கள். இத்தகைய பக்தி வழிபாட்டில் இரண்டு விதம் உண்டு.

1. ஆசார வழிபாடு, 2. அன்பு வழிபாடு. சிவகோசரியார் காளத்தி நாதருக்கு நீரால் அபிஷேகித்து பத்திர புஷ்பங்கள் சாற்றி மந்திரம் சொல்லி வழிபட்டது ஆசார வழிபாடு ஆகும். அதே காளத்தி நாதருக்கு கண்ணப்பர் தன் வாயால் நீர் கொணர்ந்து பெய்து, தலையில் செருகி இருந்த மலர்களை இட்டு, வாயில் கடித்து ருசி பார்த்த பன்றி இறைச்சியைப் படைத்து வணங்கியது அன்பு வழிபாடு ஆகும். ஆசார வழிபாட்டை விட உயர்ந்தது அன்பு வழிபாடு. இந்த வழிபாட்டில் உறையும் அடியார்கள் இறைவனை எங்கே எந்த இடத்தில் எந்த நேரத்தில் அழைத்தாலும் வந்து காத்தருளும் பெருமை மிக்கவராய்விடுதல் அதிசயமல்ல. "எங்கே நினைப்பினும் அங்கே என்முன் வந்து எதிர் நிற்பனே" என்று உறுதி படுத்துகின்றார் அருணகிரியார். சொல்வதோடு அல்லாமல் அதை மெய்ப்பித்துக் காட்டுகின்றார். அன்பு வழிபாடு, ஆசார வழிபாட்டை விட உயர்ந்தது மானசீக வழிபாடு ஆகும். மானசீக வழிபாட்டினால் கண்ணபிரானை அகல விடாது சகாதேவன் மனத்துள்கட்டி வைத்த வரலாறு பாரதத்தில் உண்டு.

இதேபோல் அருணகிரிநாதர் காட்டில் ஒரு மரத்தடியில் யோக நிட்டையில் அமர்ந்து மனத்தகத்தே முருகனை வரித்து வீற்றிருக்கிறார். அதைப்பார்த்த சில மாடு மேய்க்கும் சிறுவர்கள் யாரோ கள்ளச் சாமியார் அமர்ந்திருக்கிறார் என்று கேலிபேசி, காட்டில் இருக்கும் சுள்ளிகளைப் பொறுக்கி அருணகிரிநாதர் மேல் இட்டு நெருப்பு வைத்து விடுகின்றனர். நெருப்பின் சூடுபட்டு அருணகிரி நாதர் நிட்டை கலைகிறது. தன்னை நெருப்பு பற்றி இருப்பதறிந்து "சினத்தவர் முடிக்கும் பகைத்தவர் குடிக்கும் செகுத்தவர் உயிர்க்கும் சினமாக" என்று பாடுகிறார். உடனே தீ வைத்த மாடு மேய்க்கும் சிறுவர்கள் எல்லாரும் மாண்டுவிழுகின்றனர். உடனே அச்சிறுவர்களது தாய் தந்தையர் வந்து அருணகிரிநாதர் திருவடியில் வீழ்ந்து வணங்கி வேண்ட அருணகிரிநாதர் அவர்கள் "சிரிப்பவர் தமக்கும் பழிப்பவர் நமக்கும் திருப்புகழ் நெருப்பென்று அறிவோம்யாம்" என்னும் அடுத்த அடிகளை பாடியதும சிறுவர்கள் உயிர் பெற்று எழுகின்றனர். இது மானசீக பக்தியினால் விளைந்த பெருஞ் சிறப்பு ஆகும். இத்தகைய வழிபாடுகள் மனிதர்களாகிய நாம் மட்டுமன்றி தேவர்களும் வழிபட்டு பலன் அடைந்த வரலாறுகள் உண்டு; இடங்கள் உண்டு.



ஸ்ரீ வீரட்டேஸ்வரர் கோயில்—வழுவூர்.

இதுமட்டுமல்லாது, நண்டு பூஜித்தது, சிலந்தி பூஜித்தது, பாம்பு பூஜித்தது, காகம் பூஜித்தது, அணில் பூஜித்தது, குரங்கு பூஜித்தது (குரங்கணி முட்டம்) என்று வரலாறுகள் பல உண்டு. குரங்கு அறியாமலே வில்வ இலையை சிவலிங்கத்தின் மேல் இட்டதற்காக அடுத்த பிறப்பில் முசுகுந்தச் சக்கரவர்த்தியாகப் பிறந்தது. விளக்கின் திரியை எலி தூண்டிய காரணத்தால் அடுத்த பிறப்பில் அவ்வெலி பலிச்சக்கரவர்த்தியாகப் பிறந்தது. இதன் மூலம் வழிபாடு எவ்வளவு உயர்ந்தது என்பதை உணர்ந்தீர்கள். இப்போது இந்த வழிபாடு ஏன்? என்னும் இறுதிக் கேள்விக்கு வருகிறோம்.

மனம் ஒடுங்குவதற்கு வழிபாடு தேவை. மனம் ஒடுங்குமானால் ஒன்றையும் அது நாடாது. பொன்

| | | |
|---|---|---|
| 1. | விநாயர் பூஜித்த தலம் | — திருச்செங்காட்டங்குடி |
| 2. | தண்ணீரை சிவலிங்கமாக்கி அம்பிகை வழிபட்டது | — திருவானைக்காவல் |
| 3. | முருகப்பெருமான் பூஜித்ததலம் | — திருச்செய்ஞலூர் |
| 4. | சூரசங்காரம்முடிந்து முருகன் திரும்புகையில் பூஜித்தது | — திருச்செந்தூர் |
| 5. | திருமால் சக்கரம்பெற பூஜித்தது | — திருவீழிமிழலை |
| 6. | பிரம்மா பூஜித்த தலம் | — பிரம்மபுரம் |
| 7. | இந்திரன் பூஜித்த தலம் | — கண்ணார் கோயில் |
| 8. | எறும்பு பூஜித்த தலம் | — திருவெறும்பூர் |
| 9. | யானை பூஜித்த தலம் | — திருவானைக்காவல் |

# நவராத்திரி நாயகி மூவர்

(இலட்சுமி, சரஸ்வதி, துர்க்கை)

'புலமைக்கனல்'

ஸ்ரீதலம் சிறந்த மூர்த்தி
திவ்விய ஜோதி வேங்கடவன்
பாதத்தைப் பணிந்தேன் பாவால
நாயகி மூவரை வாழ்த்தவே!
ஆதியில் தோன்றிய ஓங்கார
சொரூப விளக்கம் அன்பு
நீதியின் நீள்புகழ் மங்கலம்
எங்கும் விளக்கம் பெறவே!
நாயகி இலட்சுமி; பிரம்மன்
நாவில் உள்ள சரஸ்வதி
ஆயகலை அத்தனையும் கற்ற
கலைமகளாம் அன்னை அவளே!
தூயதுர்க் கைத்தாய் மூவரைப்
போற்றினேன் தமிழின் சொல்லால்
மாயவே தீமை எல்லாம்
மாணிக்க நிலையறம் வாழவே!
இவ்விடம் இன்பப் பொருளை
அருளும் நல்லரசி அன்னை
கவ்விடும் கனத்த செல்வம்
தன்னால் உலகை வளமாக்கும்
செவ்வி நிறைந்த இலட்சுமி
சீர்திருத்தச் செம்மல் அவளே!
திவ்விய அருளும் தீர்க்காயுள்
நிறையும் பொருளும் அருள்கவே!
கல்வியை அளித்திடும் கடவுள்
சரஸ்வதி அன்னை கருணை
எல்லார் உள்ளத்திலும் எங்கும்
நிறைய சிந்தனை வளத்தால்
வல்லமை காட்டிடும் வடிவத்தாள்
நவசக்தி நாயகி வாழ்க!
சொல்லும் பொருளும் அவளே!
சொர்க்கம் அருளபவள் அவளே!
வீரத்தில் நிறைந்த வீறாய்
விளங்கித் தீமையை அழித்துத்
தீரத்தைத் தீந்தமிழ்ச் சிறப்பை
திக்கில் உள்ளோர்க்கு அளிக்கும்
பாரமாம் கவலை போக்கும்
பாரையே தாங்கி நிற்கும்
பாரத சக்தி அன்னை
பரமனின் துணையே அருள்கவே!

னையும் மண்ணையும் ஒன்றாகக்காண்கின்ற பக்குவம் மன ஒடுக்கத்தால் வருகிறது. மங்கையர்கள் அனைவரையும் பராசக்தியாக காண்கின்ற பக்குவம் மன ஒடுக்கத்தால் வருகிறது. அரசனையும் துரும்பாக மதிக்கும் இயல்பு மன ஒடுக்கத்தால் வருகிறது. கடலைக் கண்டும் பயப்படாத தன்மை மன ஒடுக்கத்தால் வருகிறது. "கற்றுணை பூட்டியோர் கடலிற் பாய்ச்சினும் நற்றுணை யாவது நமச்சிவாயவே" என்கின்ற அப்பர் வாக்கு அதை மெய்ப்பிக்கின்றது.

எனவே ஒடுங்கிய மனத்துள் இறைவன் உறைவான். அவனைக் கண்டு பேரானந்தப் பெருவாழ்வு பெறமுடியும் என்பது தெளிவாகிறது. அதற்குத் தேவை வழிபாடு. இப்படி வழிபடுகின்றவர்களுக்கு முருகப்பெருமான் காவலனாகவந்துஅமைவானாம் "தொழுது வழிபடும் மடியவர் காவற்காரப் பெருமாளே" என்கிறது திருப்புகழ்.

எனவே இப்பிறவிப் பிணி தீர்த்து பேரானந்தப் பெருவாழ்வுபெற வழிபாடு தேவை. அதை தினசரி அரை நிமிட நேரமாவது கைக்கொண்டு உய்வு பெறுவோம் எனக்கூறி நாம் அனைவரும் இப்போது வழிபடச் செல்லுவோம்.

"உள்ளம் பெருங் கோயில் ஊனுடம்பு
ஆலயம்
வள்ளற் பிரானுக்கு வாய்கோபுரவாசல்
தெள்ளத் தெளிந்தார்க்கு
சீவன் சிவச்சொரூபம்
கள்ளப்புலனைந்தும் காளா
மணிவிளக்கே!"
(திருமூலர்)

"கிருதயுகத்தில் ஞானத்தினால் முக்தி
திரேதாயுகத்தில் தானத்தினால் முக்தி
துவாபரயுகத்தில் யாகத்தினால்முக்தி
கலியுகத்தில் பக்தியினால் முக்தி"

எனவே கலியில் வாழும் நமக்கு பக்தியும் வழிபாடும் அவசியம் எனக்கருதி பரமனை எண்ணி வழிபடுவோம்.



ஓம் ஸ்ரீ மாத்ரே நம:

# பொதுமக்களுக்கு ஓர் அரிய நற்செய்தி



**ஸ்ரீ காஞ்சி ஜகத்குரு ஸ்ரீ ஜெயேந்திர சரஸ்வதி ஸ்வாமிகள், திருமுருக கிருபானந்தவாரியார் மற்றும் பல மகான்கள் ஆசி வழங்கிய நவசக்தி நிலையத்தாரால் உருவாக்கப்படும் பூஜைக்கு உரிய தெய்வீக சாதனங்கள்.**

| வ.எண். | யந்திரங்களின் பெயரும் அதன் பலன்களும் | விலை ரூ.பை. |
|---|---|---|
| 1. | பூர்ண ஸ்ரீ சக்கர மகாமேரு பஞ்சலோகம் அனைத்துத் தெய்வங்களும் இதில் அடங்கியது (மர பீடம் உட்பட) 6½×6½ செ. மீ. ரூ. 750/- 5×5 செ. மீ. | 450-00 |
| 2. | ஸ்ரீ மகா கணபதி 8×8 செ. மீ. எந்தக் காரியமும் தடையின்றி நடக்க | 130-00 |
| 3. | ஸ்ரீ சக்கரம் 8×8செ.மீ. அனைத்து தெய்வங்களும் இதில் அடங்கியது | 130-00 |
| 4. | ஸ்ரீ மகாலட்சுமி மகாயந்திரம் 24×24 செ. மீ. 300 ஆண்டுகளுக்கு லட்சுமி கடாட்சத்தை ஏற்படுத்தி நிலைத்திருக்கச் செய்யும் (கோல்ட் பிரேம்) | 1150-00 |
| 5. | சர்வ ஜன மன தன ஆகர்ஷணம் ஸ்ரீ சாம்ராஜ்யலட்சுமி ஸ்ரீ மகா சுதர்சனம் 16×48 செ. மீ. (கோல்டு பிரேம்) (மூன்று யந்திரங்கள் சேர்த்து) வியாபாரத்தில் விருத்தியடையவும் லட்சுமி கடாட்சம், பண வரவுக்கும்,எதிரிகள் பொறாமை இவைகளை நீக்கி சுபிட்சத்தைஉண்டுபண்ணும் | 1750-00 |
| 6. | சர்வ ஜன மன தன ஆகர்ஷணம் சாம்ராஜ்ய லட்சுமி ஸ்ரீ சுதர்சனம் 8×24 செ. மீ. (கோல்டு பிரேம்) மேற்கண்ட பலனை தரவல்லது | 500-00 |
| 7. | சூலினி, சரபேஸ்வரர், ப்ரதியங்காரா 8×24 செ.மீ. (கோல்டு பிரேம்) | 500-00 |
| 8. | சூலினி, சரபேஸ்வரர், ப்ரதியங்காரா, 16×48 செ. மீ. (கோல்டு பிரேம்) மூன்று யந்திரங்கள் சேர்ந்தது வியாபாரத்திலோ, வீட்டிலோ நவக்கிரக தோஷங்களை நீக்கி எதிரிகள் இல்லாமல் செய்யவும் பில்லி, சூனியம், ஏவல்களை நீக்கி, லட்சுமி கடாட்சம் தரவல்லது. | 1750-00 |
| 9. | ரசமணி ஒன்றின் விலை ரூ. 250/-, ரூ. 500/- இது மனதை ஒரு நிலைபடுத்தும், சர்வ காரிய சித்தியும் சுகபோக பாக்கியங்களையும் தரவல்லது. | |
| 10. | கண் திருஷ்டி ஒருபுறம். மறுபுறம் சுதர்சன டாலர். கண் திருஷ்டியால் ஏற்படும் தொல்லைகளை நீக்கி எதிரிகளிடமிருந்து பாதுகாக்க வல்லது. | 70-00 |
| 11. | ஸ்ரீ சக்கரம் ஒருபுறம், மறுபுறம் ஸ்ரீ காமாட்சி டாலர். அம்பாள் கடாட்சத்தை ஏற்படுத்திச் சிரமங்களை நீக்க வல்லது. | 70-00 |
| 12. | ஸ்ரீ காமட்சி ஒருபுறம், மறுபுறம் தனாகர்ஷண டாலர். அம்பாள் கடாட்சமும், பொருள் வரவும் தரவல்லது. | 70-00 |
| 13. | சௌடாம்பிகை மாங்கல்ய பாக்கிய டாலர். அம்பாள் கடாட்சமும், பெண்கள் தீர்க்க சுமங்கலியாக இருக்கவும், கணவனுக்கு அதிர்ஷ்டத்தை உண்டாக்கவும் வல்லது. | 70-00 |
| 14. | விவாகப்ராப்தி டாலர். தடைப்பட்டு வந்ததிருமணம் தடையின்றி நடக்கும் | 70-00 |
| 15. | ஸ்ரீ சக்கரம் லட்சுமி பீஜம் டாலர் அம்பாள் கடாட்சத்தை நிலைத்திருக்கச் செய்யவல்லது | 70-00 |
| 16. | கண் திருஷ்டி படம் (கோல்டு பிரேம்) வீட்டிலும் வியாபாரத்திலும் வைப்பதால் கண் திருஷ்டி தொல்லைகள நீக்கி விபத்துக்களைத் தடுத்துக் காப்பாற்ற வல்லது | 70-00 |
| 17. | தத்தாத்ரேயர் யந்தரம் 12×12 செ. மீ. (கோல்டு பிரேம்) கண் திருஷ்டி, பொறாமை, துர்தேவதைகளால் ஏற்படும் தொல்லைகளை நீக்கிக் காப்பாற்ற வல்லது | 150-00 |
| 18. | பூஜைக்கு உரிய பஞ்சாயதன செட்டும், பாணலிங்கம், ஸ்படிக லிங்ககம் பலவிதமான மாலைகள் மாலைகள் சுத்த வெள்ளியால் செய்யப்பட்டவையும் இன்னும் பலவிதமான சாதனங்களும் கிடைக்கும் பூஜைக்குரிய பாதுகை இங்கு கிடைக்கும். | |

கோவில்களுக்கு வேண்டிய சகல யந்த்ரங்களும், கிராம தேவதைகளுக்குரிய சகல யந்தரங்களும் கிடைக்கும். ஒன்றின் விலை ரூ. 105/- ஸ்பெஷல்: கோவிலில் ஜன ஆகர்ஷணம், தன ஆகர்ஷணம் செய்யக்கூடிய யந்தரத்தில் விலை ரூ. 300/- வெளிநாட்டுக்கு 25% அதிகம். விலைப்பட்டியலுக்கு 0-50 பைசா தபால் தலையுடன் கீழ்க்கண்ட விலாசத்திற்கு விண்ணப்பிக்கவும். மேற்கண்ட யந்திரங்களின் பலன்களை ஓரளவுதான் பத்திரிகைகளில் தெரிவிக்க முடியும்.


ஸ்வாமிஜி ஸ்ரீ முருகபூஷணம்

ஸ்ரீ வித்யா உபாசகர், தலைவர் நவசக்தி நிலையம்,

153, லாயட்ஸ் ரோடு, (ஸ்டேட் பேங்க் எதிரில்), கோபாலபுரம், சென்னை - 600086.

போன் : கடை ... 472013 மா மேரு டிரஸ்டு வீடு: ... 861254


" லோகாஸ் சமஸ்தாஸ் சுகினோ பவந்து "

தொடர் கட்டுரை :

# லிங்க பூஜை

ஸ்ரீமாய ராம பத்ராய ராமசந்த்ராய வேதஸே |
ரகுநாதாய நாதாய ஸீதாய :
பதயே நம : ||

"ஜகத: பிதரௌ வந்தே பார்வதி பரமேச்வரௌ" என்று பார்வதி பரமேஸ்வரர்களை வணங்கி ரகுவம்சத்தைத் தொடங்கும் மகாகவி காளிதாஸரின் "ஸ்ரீ ரகுவம்ச" மஹா காவியத்தில் ராமனின் குலதெய்வத்தைப் பற்றி அவன் கொண்ட கருத்துக்களைக் காண்போம்.

காளிதாஸர் எங்கு எக்காலத்தில் வாழ்ந்தார் என்பதைப் பற்றி திண்ணமாய் அறிவதற்குத் தக்க சான்றுகள் கிடைக்கவில்லை. அவர் தம் நூல்களிலும் காணக்கிடைக்கவில்லை. அவர் காஷ்மீரத்தில் பிறந்தவர் எனவும், உஜ்ஜயினில் வாழ்ந்தவர் எனவும் சிலர் கூறுவர். கர்ண பரம்பரையாக வழங்கும் செய்திகள் அவர் போஜராஜனோடு வாழ்ந்தவர் எனக் கூறுகின்றன.

ரகுவம்சத்திற்குப் பெரும்பாலும் முதல் நூலாக இருந்தது வால்மீகி ராமாயணமே. மொத்தம் 19 ஸர்க்கங்கள் உள்ள இக்காவியத்தில் 18வது சர்க்கத்திற்கு மட்டுமே காளிதாஸர் விஷ்ணு புராணத்தையும், வாயு புராணத்தையும் ஆதாரமாகக் கொண்டதாகத்தெரிகிறது. மொத்தம் உள்ள 19 சர்க்கங்களில் 1564 ச்லோகங்கள் காணப்படுகின்றன. இவற்றில் ஸ்ரீராமபிரானின் முன்னோர்களைப்பற்றி அதாவது திலீபன் தொடங்கி தசரதன் வரைக்கும் உள்ள பரம்பரைக் கதைகள் 1 முதல் 9 சர்க்கம் வரை தெரிவிக்கப்பட்டுள்ளன. 10 முதல் 15 சர்க்கம் வரை ஸ்ரீராமனுடைய வரலாற்றைத் தெரிவிக்கும் பகுதியாக அமைந்துள்ளது. 16ஆம் சர்க்கத்தில் ஸ்ரீராமனுடைய புத்ரர்களான குலசவர்களின் சரிதமும் அதற்கு அடுத்த 17வது சர்க்கம் ராமனது பேரனான அதிதியைப்பற்றியும் 18 வது சர்க்கம் மிகச்சுருக்கமான முறையில் 21 அரசர்களைப் பற்றியும் 19வது சர்க்கம் அக்னிவர்ணனது காமத்தைப்பற்றியும் கூறுகின்றன.

இந்த 19 சர்க்கங்களில் ஒன்றில் கூட இராமனின் முன்னோர்களோ அல்லது இராமனோ அல்லது இராமனின் சந்ததியினரோ லிங்க பூசை செய்ததாக கவி காளிதாஸ் தெரிவிக்கவில்லை. காளிதாஸனின் இஷ்ட தெய்வம் சிவனாக இருந்த போதிலும் சிவபெருமானுக்குப் பெருமைசேர்க்கும் நோக்கத்துடன் அவர் இராமன் சிவனை வழிபட்டதாக கூற வாய்ப்பிருந்தபோதும் அவர் நேர்மையானனாக இருந்ததால் அவ்வாறான தவறான முன்னுதாரணத்தை ஏற்படுத்த விரும்பவில்லை என்பது புனாகிறது.

பத்தாவது ஸர்க்கத்தில் இராவணனால் துன்பமுற்ற தேவர்கள் மஹாவிஷ்ணுவை சரணமடைந்ததை விவரிக்கும் போது அவர்கள் பகவானை நோக்கி செய்த துதிகளை காளிதாஸ் அவனுடைய கவிதையில் வடிக்கும் போது பெரிய ஞானிகள் பகவானை துதிப்பது போல அந்த ச்லோகங்கள் அமைந்துள்ளன. "ஸர்வம் விஷ்ணு மயம் ஜகத்" என்கிற வாக்கியத்தை நினைவுறுத்துவது போலுள்ளது.

இவ்விடத்தில் வால்மீகி ராமாயணத்தில் பிரமன், சிவன், இந்திரன் முதலிய அனைத்து தேவர்களும் பகவானை சரணடைந்ததாகத் தெரிவிக்கிறார்.

இனி அவர்கள் மஹாவிஷ்ணுவை நோக்கி செய்த துதிகளை வரிசையாகக் காண்போம்!

நமோ விஸ்வஸ்ருஜே பூர்வம் விஸ்வம் ததனு பிப்ரதே |
அத விஸ்வஸ்ய ஸம்ஹர்த்ரே துப்யம் த்ரேதா ஸ்தி தாத்மனே ||

[ரகுவம்சம், 10வது சர்க்கம் ஸ்லோகம்-16]

(முதலில் உலகத்தை ஆக்கியவரும், அதன்பின் உலகத்தை காப்பவரும், பிறகு உலகத்தை அழிப்பவரும் ஆக மூவகையாய் இருந்த தன்மையை உடைய உமக்கு வணக்கம்!)

இந்த ஸ்லோகம் நமக்குக் கம்பனின் கடவுள் வாழ்த்துச் செய்யுளான,

உலகம் யாவையும் தாமுளவாக்கலும்
நிலை பெறுத்தலும் நீக்கலும் நீங்கலா
அலகிலாவிளையாட்டுடையாரவர்
தலைவரன்னவர்க்கே சரண் நாங்களே

திரு. ஆர். வி. ஸ்ரீதர ராமானுஜன்
மதுரை.

எனும் செய்யுளை நினைவுறுத்துகிறது. கவி காளிதாஸனும் கம்பனும் உலகை ஆக்கி, காத்து, அழிக்கக்கூடிய முத்தொழில்களைச் செய்பவன் ஒருவனே என்றும் அவன் விஷ்ணுவே என்றும் நினைக்கக்கூடிய ஒத்த கருத்துடையவர்கள் என்பது தெளிவாகின்றது.

# அன்னதானமே அற்புத தானம்

ஒவ்வொரு மனிதனும் தான் முந்திய ஜன்மங்களில் செய்த தான தர்மங்களுக்கேற்ப - புண்ய பாவங்களுக்கேற்ப - அதற்குத் தக்க அளவில் செல்வமும் வசதியும் பெறுகிறான். அவ்வாறு அவன் பெற்றுள்ள செல்வத்திற்கும் வசதிக்கும் தான அனுபவிக்கவிருமபுபவைகளை முதலில் மானசிகமாக பகவானுக்கு அர்ப்பணிக்க வேண்டும். பிறகு அதிதிகளுக்குப் பகிர்ந்து தந்து பின் தானும் அனுபவிக்க வேண்டும்.

ஆகவே, தனக்கே என்று எவனும் எதையும் உண்ணலாகாது. அப்படி உண்பது ஊண் அல்ல; அது பாவமே என்பதை,

"கேவலாகோ பவதி கேவலாதீ"

என்பதாகக் கூறுகிறது வேதம்.

இதையும்,

"புஞ்ஜதே தே த்வகம் பாபா:
யே பசந்த்யாத்மகாரணாத்" என்கிறது.

"தனக்கென்று சமைத்து உண்பவர்கள் பாவத்தையே புசிக்கும் பாவிகள்" என்று கூறுகிறது. இந்த உண்மையை உணர்ந்தே பழங்கால மக்கள் வாழ்ந்ததாக வரலாறுகள் கூறுகின்றன.

பதினென் புராணங்களிலும், பதினெண் ஸ்மிருதிகளிலும், வேதங்களிலும் அதிதிஸத்காரமெனற அன்னதானத்தைப்பற்றிக் கூறப்பட்டுள்ளது.

"கோதானம், பூதானம், கன்யகாதானம், வித்யாதானம் என்ற பலவித தானங்களிலே அன்னதானத்திற்குரிய சிறப்பு வேறு எந்ததானத்திற்கும் கிடையாது" என்று புண்ணிய தத்துவ நூல்கள் பறைசாற்றுகின்றன.

"அந்நதாநாத் பரம் நாஸ்தி ந பூதம் ந பவிஷ்யதி |
ஹஸ்த்யச்வரத தாநாநி தாஸிதாஸ க்ருஹாணி ச ||
அந்நதாநஸ்ய ஸர்வாணி கலாம் நார்ஹந்தி ஷோடகிம் |
க்ருத்வாபி ஸுமஹத்பாபம் ய: பச்சாதந்ந தோபவேத் ||
ஸ்வர்வ பாபவிநிர்முக்தோ லோகாநாப்நோதி சாக்ஷயாந் ||

*(அக்னி புராணம் அத் 211—சு44—46)*

இதற்கு விளக்கம் யாதெனில்,

"எந்த தானத்திலும், அந்த அந்த தானத்தைப் பெறுபவனும் திருப்தி அடைய வேண்டும். அதாவது, தானமிடுபவன் தானம் வாங்குபவனைத் திருப்தி செய்விக்க வேண்டும். கோதானம், பூதானம் முதலியவைகளைப் பெறுபவன் 'இன்னும் இருந்தால் தேவலை' என்ற அதிருப்தியை மனத்திலாவது நினைப்பான் ஆனால் வயிறு நிறைய அன்னம் புசித்தவன் 'போதும், போதும்' என்று மனதார நினைப்பானே தவிர 'இன்னும் தேவை', என நினைக்க மாட்டான்.

ஆகவே, தானம் தருபவன், தானம் பெறுபவன் இருவருக்கும் திருப்தியைத் தரும் மிகச்சிறந்த தானம் இந்த அன்னதானம் ஒன்றே ஆகும்.

அன்னதானம் என்பது ஒரு விதை. பசித்தவன் ஒருவனுக்கு இடும் அன்னம் ஆயிரம் ஆயிரம் மடங்காக வளர்ந்து உலக வாழ்க்கை வசதிகளைத் தரும். ஆகையால் பசித்த வயிற்றிற்கு இடப்படும் அன்னம் அதைப் புசிக்கும் ஜீவனுடைய வாழ்த்துதலால் அன்னத்தை இட்டவருக்கு நல்வாழ்க்கை கிடைக்கும்"

எனவே நாமும் நம்மால் முடிந்த அளவு அன்னதானம் செய்து ஸ்ரீ வேங்கடேசப்பெருமானின் அருளைப்பெற்று வளமுடன் வாழ முயலுவோமாக.

நீ. த. வெங்கட், பி.எஸ்ஸி., ஓரத்தி.

ரஸாந்தராந் யேக ரஸம் யதா திவ்யம்
பயோஸ்ருதே |
தேசே தேசே குணேஷ்வேவ
மவஸ்தாஸ்த்வ மவிக்ரிய: ||
*(ஸ்லோ. 17)*

(இனிப்பு என்ற) ஒரே சுவையையுடைய, ஆகாயத்திலுண்டான மழை நீர் அந்தந்த தேசத்தில் வெவ்வேறு சுவைகளை எப்படி அடைகிறதோ இவ்வாறு மாறுதலில்லாத தாங்கள் (ஸத்துவம் முதலிய) குணங்களில் (குணங்கள் காரணமாக) பிரம்மனாயிருத்தல், முதலிய தன்மைகளை அடைகிறீர்.

உமது நிலையானகுணம் ஸத்துவம் ஒன்றே. உண்மையில் நீர் எவ்வகையான மாறுபாடுமில்லாதவர். ஆனால் நீர் கைகொள்ளும் குணங்களுக்கு ஏற்ப தொழில்களையும் பெயர்களையும் ஏற்கின்றீர். உண்மையில் விஷ்ணுவான நீர் ராஜஸ குணத்தின் காரணமாக பிரம்மாவின் தன்மையையும் தாமஸ குணத்தின் காரணமாக ருத்ரனின் தன்மையும் ஏற்கிறீர். ஆனால் நீர் உண்மையில் மாறாத தன்மையுடையவர்.

அமேயோ மித லோகஸ்த்வ மநர்த்தி
ப்ரார்த நாவஹ: |
அஜிதோ ஜிஷ்ணு ரத்யந்த மவ்யக்தோ
வ்யக்த காரணம் ||
*(ஸ்லோ. 18)*

(நீர் உலகத்தவரால் அளவிடற்கரியவர்; ஆனால் நீர் உலகத்தை அளந்தவர்; உமக்கு வேண்டியது ஒன்றும் இல்லை. ஆனால் வேண்டினோர்க்கு வேண்டியவற்றை அளிப்பவர்; நீர் மற்றவரால் ஜயிக்கப்படாதவர், ஆனால் நீர் உலகத்தை ஜயிப்பவர்; நீர் நுண்ணிய உருவங் கொண்டவர், ஆனால் உருவத்தை உடைய இவ்வுலகிற்குக் காரணமானவர்.)

ஸர்வஜ்ஞஸ்த்வ மவிஜ்நாதஸ் ஸர்வ
யோனிஸ்த்வமாத்மபூ: |
ஸர்வ ப்ரபு ரனீஸஸ்த்வ மேகாஸ்த்வம்
ஸர்வ ரூபபாக் |
*(ஸ்லோ-20)*

(தேவரீர் எல்லாமறிந்தவர்; ஆயினும் மற்றவர் உம்மை முற்றிலுமறிந்தாரில்லை; உலகத்திற்கெல்லாம் தாங்கள் காரணமாக இருப்பவா, ஆனால் உமக்கொரு காரணமில்லை. நீர் அனைத்துக்கும் தலைவரே அன்றி உமக்கொரு தலைவரில்லை நீர் ஒருவரே பலவாக இருக்கின்றீர்.)

ஸப்த சாமோபகீதம் த்வாம்
ஸப்தார்ணவ ஜலேசயம் |
ஸப்தார்ச்சிர்முக மா சக்யுஸ் ஸப்த
லோகைக ஸம்ச்ரயம் ||
(ஸ்லோ. 21)

(ஏழு வகை சாமங்களால் (கானங்களால்) துதிக்கப்படுபவர் நீரே! ஏழு சமுத்ரங்களும் பிரளய காலத்தில் ஒன்று சேருவதால் அவற்றின் ஜலத்தில் சயனித்திருப்பவர்; அக்னி தேவன் உமது வாயாக இருப்பவன்; ஸகல உலகத்திற்கும் தாங்களே அடைக்கலம்)

சதுர் வர்க பலம் ஞானம் கலா-
வஸ்தாஸ்சதுர்யுகா: |
சதுர் வர்ண மயோ லோகஸ்த்வ தத்
ஸர்வம் சதுர்முகாத் ||
(ஸ்லோ. 22)

(அறம், பொருள், இன்பம், வீடு என்றநான்குபயன்களைப்பெறக்காரணமாயுள்ள அறிவு; அகண்டமான கால தத்துவத்தை க்ருதயுகம், த்வாபரயுகம், திரேதாயுகம், கலியுகம் எனவகுக்க கால அளவுகள்; பிராம்மண, க்ஷத்ரிய, வைச்ய, சூத்ரர்களாகிய நான்கு சாதிகள் ஆகியன கொண்ட இவ்வுலகனைத்தும் நீரே பிரம்மாவின் உருவம் கொண்டு படைத்தீர்)

லிங்கபூசை கட்டுரை 2ல் சிவபிரான், இராமனை நோக்கி, இராமனுடைய சரணாரவிந்தங்களை அடையாதவர்களுக்கு முக்தி கிடையாது எனக் கூறியதாக துளசிதாஸ் ராம சரித மானஸில் கூறியதையே இங்கு தேவர்கள், ஸ்ரீ மந் நாராயணனை நோக்கிக், கூறுவதாக கவி காளிதாஸ் ஸ்லோகம் அமைத்துள்ளது. எனவே கம்பனும் துளசிதாஸும் "முக்தி அளிப்பவன் முகுந்தனே" எனும் விஷயத்தில் ஒத்த கருத்துடையவர்கள் என்பது புலனாகிறது

அஜஸ்ய க்ருஹ்ணதோ ஜன்ம
நிரீஹஸ்ய ஹதத்விஷ :
ஸ்வபதோ ஜாகரூகஸ்ய யதார்த்யம்
வேத கஸ்தவ : ||
(ஸ்லோ. 24)

(நீர் ஒன்றுக்கொன்று முரண்பட்ட தன்மைகளைக் கொண்டவராக இருப்பதால் உமது உண்மையான தன்மையை யாரே அறிவார். நீர் மற்ற உயிர்களைப் போல் பிறவாதவர். (மற்ற உயிர்கள் கர்மத்தின் காரணமாகப் பிறப்பர்; தாங்களோ மக்களுடைய நன்மைக்காகத் தங்களுடைய அருளின் காரணமாக அவதரிக்கிறீர்) ஆனால் மத்ஸ்யம், கூர்மம், வராஹம் முதலிய பல்வேறு உருவங்களை உலகங்களைக் காப்பதன் பொருட்டு தம்மிச்சைப்படி ஏற்றுப்பிறந்தவர். எப்பொருளிலும் பற்றில்லாமல் செயலற்றிருப்பவர்; ஆனால் பகைவர்களை கொல்வதாகிய செயலையுடையவர்; எப்பொழுதும் எல்லாவற்றையும் அறியும் நிலையிலுள்ளவர்; ஆனால் (யோக) நித்ரை செய்பவர். இவ்வகையான தன்மையையுடைய உம்மை அறிவிலிகளான யாம் எங்ஙனம் அறிவோம்.)

இவ்விடத்தில் "ஆஜஸ்ய ஜன்ம" என்பதை "அஜாய மானோ பஹுதா விஜாயதே" (பிறப்பில்லாதவன் ஆயினும் பலபடியாக பிறக்கிறான்) என்கிற புருஷ ஸூக்த வணக்கத்துடன் ஒப்பு நோக்கற்பாலது. "அகிஞ்சநஸ் ஸந் ப்ரபவ: ஸம்பதாம் த்ரிலோக நாத: பித்ரு ஸங்கோசர:" எனும் வாக்யங்களும் ஒப்பு நோக்கத்தக்கன,

ஸப்தாதின் விஷயாந் போக்தும்
சரிதும் துஸ்தரம் தப : |
பர்யாப்தோஸி ப்ரஜா : பாது மௌ
தாஸீந்யேந வர்திதும் ||
(ச்லோ. 25)

(ஒலி (சங்கீதம் முதலியன) முதலிய புலன் நுகர் பொருட்களை நுகர்பவர் புலனையடக்கிச் செய்ய வேண்டிய தவத்தை செய்தற்குரியராகார். ஆனால் நீர் கிருஷ்ணாவதாரம் முதலியவற்றை எடுக்கப்போகும் காலங்களில் பலவித இன்பங்களை நுகர உள்ளீர். பதரிகாச்ரமத்தில் நர நாராயணர்களாக வந்து தவமும் செய்தீர். நடுவு நிலையுடன் ஒன்றிலும் பற்றற்றிருப்பவர் மக்களைக் காப்பதரிது. நீரோ மக்களையும் காக்கின்றீர்; ஒன்றிலும் பற்றில்லாமலுமுள்ளீர். இவை எல்லாம் தேவரீர் ஒருவரே செய்யக்கூடும், பிறர்க்கு சாத்யமன்று. புலன்களால் அநுபவிக்கப்படுகின்ற பொருள்களனைத்தையும் 5 வகையாகப் பிரிக்கலாம்; காதுனால் நுகரப்படுவன (ஸப்தம்) ஸங்கீதம் முதலானவை; கண்களால்நுகரப்படுவன (ரூபம்) அழகான வர்ணமும் தோற்றமும்; மூக்கினால் நுகரப்படுவன (கந்தம்) நறுமணம்; நாக்கினால் (நாவினால்) நுகரப்படுவன (ரஸம்) அறுசுவை; அணைத்துக்கொள்வது தொடுவது முதலானவை (ஸபர்சம்) ஸ்பர்ச ஸுகம் எனப்படும்.)

ராமாவதார காலத்தில் மாம்ஸ பக்ஷணம் முதலானவை செய்தாலும் ஏக தார விரதம் உடையவனாயிருந்தான் இராமன்: கிருஷ்ணாவதார காலத்தில் கோபியருடன் பலவிதமான லீலைகளை செய்து "தீராத விளையாட்டுப் பிள்ளை" யாக இருந்த போதிலும் "கீதோபதேசம்" செய்து ஞானாசாரியனாக விளங்கினான் கண்ணன்; அனைவரும் இகழத்தக்க முறையில் திரியும் (பன்றியாக) வராஹவதாரம் செய்த போதும் பூமியைக் காத்தான் வராஹப்பிரான்; குள்ள வாமனனாக அவதரித்த போதும் நெடியோனாக உலகளந்தான் திரிவிக்ரமன்: இவையெல்லாம் பிறர்க்கு சாத்யமல்ல என்கிறார் காளிதாஸ்.

பஹுதாப்யாகமைர் பிந்ந : பந்தா
நஸ் சித்தஹேதவ : |

த்வய்யேவ நிபதந்யோகா ஜாஹ்நவீயா
இவார்ணவே ||
(ஸ்லோ. 26)

(கங்கை நதியின் வெள்ளப்போக்குப் பல கிளைகளாகப் பிரிந்துசென்ற போதிலும் இறுதியில் கடலையே அடைகின்றது. அதைப்போல் முக்திக்கான வழிகள் (கர்மயோகம்,ஞான யோகம், பக்தி யோகம் முதலான பல பல வழிகள் கூறப்பட்டுள்ளன. ஆனால் அவையனைத்தும் உம்மிடமே உயிர்களை சேர்விக்கின்றன.)

ப்ரத்யக்ஷாப்யபரிச்சேத்யோ
மத்யாதிர் மஹிமா தவ |
ஆப்த வாகநுமாநாப்யாம் ஸாத்யம்
த்வாம் ப்ரதி காகதா ||
(ச்லோ. 27)

(கண்களால் பார்த்து அறியக் கூடியது இவ்வுலகம்; இது உம்மால் உண்டாக்கப்பட்டது. இது உமது செல்வம். எதிரே கண்களால் பார்த்து அறியக் கூடியது என்று சொன்ன போதிலும் இவ்வுலகின் பெருமையை உள்ளவாறு அறியக்கூடவில்லை. உம்மால் உண்டாக்கப்பட்டதும் பிரத்யட்சம் எனப்படும் கண்களால்காணும் இவ்வுலகத்தையே நன்கு அறிய முடியாத போது வேதத்தினாலேயே அறியப்பட வேண்டிய உம்மை யாம் அறிவது எங்ஙனம்?)

இந்த ச்லோகத்தின் மூலம் உலகை உண்டாக்குபவன் பிரம்மா: அழிப்பவன் சிவன்; எனும் இக்காலத்தினரின் கொள்கையை காளிதாஸ் ஒத்துக் கொள்ளவில்லை என்பதும், வேதத்தில் கூறப்படுவது போல திருமாலே பிரம்மாவின் அந்தர்யாமியாய் இருந்து (உள்ளுறைந்து) படைப்பதாகவும் திருமாலான தம்முடைய உருவத்துடன் இருந்து உலகை காப்பதாகவும், இறுதியில் சங்கரனின் உள்ளுறைந்து உலகை அழிப்பதாகவும் ஆக "முத்தொழிலையும் செய்யும் முதல்வன் முகுந்தனே" என்பதே கவி காளிதாஸனின் கருத்தாக நாம் உணரமுடிகிறது. அவன் தீவிர சிவ பக்தன் என்பதை இவ்விடத்தில் நாம் நினைவில் கொள்ள வேண்டும்.

கேவலம் ஸ்மரணேனைவ புநாஸி
புருஷம் யத : |
அநேந வ்ருத்தய : சேஷா நிவேதித
பலாஸ்த்வயி ||
(ச்லோ. 28)

(உம்மை நினைத்த மாத்ரத்திலேயே நீர், அவ்விதம் நினைப்பவரை பரிசுத்தராக்குகின்றீர். உம்மைப் பற்றிய நினைப்பே இத்தகைய பயனைத் தருமாயின், உம்மை நேருக்கு நேராக காணுதல், தொடுதல், பூஜித்தல் போன்ற மற்ற செயல்களால் ஏற்படும் பலன்களை அளவிட முடியாது அன்றோ!)

இவ்விடத்தில், "கோடி ஜனம க்ருதம் பாபம் ஸ்மரணே விநஸ்யதி" (கிருஷ்ணனை) நினைத்த மாத்ரத்தில் கோடி ஜன்மத்தில் செய்த பாவங்களும் அழிகின்றன எனும் கிருஷ்ணாஷ்டக பல ச்ருதியின் அர்த்தம் ஒப்புநோக்கத் தக்கது. "ஒரு முறை ராம நாமத்தை சொன்னதும் பிரம்ம ஹத்தி (கொலை) செய்த பாபமும் நீங்கும் என சிவன், பார்வதியிடம் கூறுவதாக துளசிதாஸ் ராம சரித மாநஸில் கூறுவதும் அறியத் தக்கது.

உததேரிவ ரத்நானி தேஜாம்ஸீவ
விவஸ்வத: |
ஸ்துதிப்யோ வ்யதிரிச்யந்தே துராணி
சரிதாநி தே ||
(ச்லோ. 30)

(கடலிலுள்ள ரத்னங்களை கணக்கிட முடியாது: சூரியனின் ஒளிக்கதிர்களை அளவிட முடியாது. அதைப் போல மனத்திற்கும் வாக்கிற்கும் எட்டாத உமது செயல்கள் தோத்திரங்களுக்குள் அடங்காதன)

இச் ச்லோகத்தில் பகவானுடைய பெருமைகளை ஸ்தோத்திரங்களுக்குள் அடங்காது என்கிறார்.

அநவாப்த மவாப்தவ்யம் ந தே
கிஞ்சன வித்யதே |
லோகாநுக்ரஹ ஏ வைகோ
ஹேதுஸ்தே ஜன்ம கர்மனோ : ||
(ச்லோ. 31)

(ஸர்வேச்வரனான தேவரீர் எல்லாம் நிரம்பியவர். ஆதலால் உம்மால் இது வரை அடையப்படாது, இனி அடையப்படவேண்டிய பொருள் உமக்கு ஏதுமில்லை. ஆனால் நீர் அவதாரங்கள் எடுப்பதும் தீயவரை தண்டித்தல் முதலிய செயல்களைச் செய்தாலும் அவையாவும் உலகத்தின் நன்மைக்காகவே ! அன்றி அச் செயல்களால் உமக்கு ஆக வேண்டியது ஒன்றுமில்லை)

(40-ஆம் பக்கம் பார்க்க)

# அன்றைய திருவேங்கடம்



என்று வாமன புராணம் கூறுகிறது. அந்த யுகத்தில் நரசிம்மாத்ரி என்று பெயர் பெற்ற இந்த மலை கலியுகத்தில் வேங்கடாத்ரி (அ) திருவேங்கட மலை என்ற நாமம் பெற்றது.

பிரம்மாண்ட புராணத்தில் கூறியுள்ளதாவது: ஆதிசேஷனுக்கும், வாயுதேவனுக்கும் பலப்பரீட்சை நடந்தது. காரணம் தம்மீது ஸ்ரீமந் நாராயணன் சயனித்திருப்பதால் அகில உலகங்களும் தன்னால்தான் உயிர் வாழ்கின்றன என்ற மமதை ஆதிசேஷனுக்கு. ஆணவத்தால் ஆதிசேஷன் மேருமலையைச் சுற்றிக் கொண்டான். தன்னை வாயுதேவன் அசைக்க முடியாது என்ற கர்வம். வாயுபகவான் திருமாலை தியானித்துக் கொண்டே ஆதிசேஷனோடு மேரு பர்வதத்தின் சிறு பகுதியைச் சேர்த்து இப்பகுதியில் தள்ளினான். திருப்பதி மலையின் ஏழு குன்றுகளும் ஆதிசேஷனின் ஏழு மகுடங்களாகக் கருதப்படுகின்றன. இதுபோல

திரு. எம். என். திருமலய்யா,
சேலம்.

வேறு குன்றுகள், மலைகள் உலகத்தின் எந்தப் பகுதியிலும் காட்சியளிப்பதில்லை. ஆதிசேஷன் தேகமாகவும், விஷ்ணு அதில் துயில் கொண்டிருப்பதாகவும் ஐதீகம்.

கி. மு. 5-ஆம் நூற்றாண்டிற்கு முந்திய காலம் வரலாற்றுக்கு முற்பட்ட காலமெனவும், கி.மு. 5ஆம் நூற்றாண்டு முதல் ஆயிரம் ஆண்டுகள் பழைய வரலாற்றுக் காலம் எனவும், அதற்குப் பிந்திய காலம் புதிய வரலாற்றுக் காலம் எனவும் சரித்திர ஆசிரியர்கள் வகுத்துள்ளனர்.

வேங்கடம் எனும் திருப்பதி கி.மு. 4000 ஆண்டுகட்கு முன்பிருந்தே தமிழ் நாட்டு அரசர்களுக்கு வடஎல்லையாக அமைந்திருந்தது. தமிழகம் தழைத்து நிலவிய காலத்தில் அதனை ஆண்ட மன்னர் மரபுகளின் அரசியல் வரலாறு தொடர்ச்சியாய் அமைப்பதற்குத் தேவையான ஆதாரங்கள் இல்லை. அவர்களுள் முடிசூட்டு வழக்குகள் அடிக்கடி எழுந்தனவென்றாலும் பொதுவாக நோக்குமிடத்து அரசுரிமை மரபு வழியே தொடர்ந்து வந்தது. வேங்கட மலையிலும் சுற்றியுள்ள இடங்களிலும் குடியிருப்புகள் கி.மு. 6ஆம் நூற்றாண்டுக்கு முன்பு இருந்தமைக்குப் போதிய தடயங்கள் கிடைக்கவில்லை.

### புராணங்களின்படி :

துவாபர யுகம் முடிந்த பிறகு கலியுக வரதனாக 'ஸ்ரீமந் நாராயணன் வேங்கட மலையில் எழுந்தருளினான்

### சரித்திரச் சான்றுகள் :

புகழ்பெற்ற சோழமரபு கரிகாலன் (கி. பி. 50-95) வேங்கடமலை அருகிலிருந்த அருவாளரை வென்று அவர்களின் நாட்டைத்தன் அரசுடன்சேர்த்துக் கொண்டதோடு, தன் வேளாளர் தலைவர்களுக்கு வென்ற நாட்டைப் பிரித்துக் கொடுத்தான். அருவாளர் என்பார் அருவா நாடு, அருவாடை

## விண்ணப்பம்

தி. தி. தேவஸ்தான கோயில்களில் மற்றும் திருமலை ஸ்ரீ வேங்கடேஸ்வரர் கோயிலில் நடைபெறும் ஆர்ஜித சேவைகளுக்காக அனுப்பப்படும் கட்டணத் தொகையினை தேசியமாக்கப்பட்ட வங்கிகளில் மட்டுமே பெறப்பட்ட 'டிமாண்ட் டிராஃப்ட்' (D. D.) அல்லது 'பேஆர்டர்' (Pay order) மூலமாக அனுப்புமாறு பக்தர்கள் கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள். 'செக்' (Cheque)குகளை அனுப்புவதால் கால விரயமும், நிர்வாகச் சிக்கலும் மேலாண்மைக்கு ஏற்படுகின்றது என்பதைத் தெரிவித்துக் கொள்கின்றோம்.

தலை (வேங்கடம் மலை உள்பட) ஆகிய பகுதிகளில் வாழ்ந்த நாகரின் ஒரு பிரிவினர், வேடுவர்கள், எயினர் என்பாரும் மிகுந்திருந்தனர்.

வட எல்லையாகிய வேங்கடத்திற்கு அப்பாலிருந்த வடுக நாட்டிலிருந்து வந்தவர்கள் "வடுகக் கருநாடா" என்று அழைக்கப்பட்டனர். இவர்கள் வடுகு மொழி பேசினர். தெலுங்கும், கன்னடமும் அப்பொழுது இருவேறு மொழிகள் ஆகவில்லை.

வடவேங்கடம் மலைப்பகுதி தொண்டை மண்டலத்தில் இருந்தது. தொண்டை மண்டலத்துக்குத் தலைமை இடம் காஞ்சி. அரசனின் பெயர் தொண்டைமான் தண்டிரையன். நாகப்பட்டணத்துச் சோழன் ஒருவன் நாக கன்னியொருத்தியை மணந்தான். தாயானவள் பெற்ற பிள்ளையைத் தொண்டைக்கொடி கட்டிக் கடல் வழியே விடுத்தாள் என்றும் அப்படிவந்த பிள்ளைக்குத்தனது நாட்டின் வடபகுதி பிரித்துக் கொடுத்து கரிகாலன் அரசேற்றிவைத்தான் என்றும் அவன் ஆண்ட நாடு தொண்டை நாடு என்று பெயர்பெற்றது என்றும் கூறுவர். தண்டிராயன் தான் விஷ்ணு வழியில் திரையர் மரபில் உதித்தவன் என்றும் கூறிக்கொண்டான். தண்டிரையன்-இளந்திரயன் என்றும் அழைக்கப்பட்டான். இவன் காலத்தில் (கி.பி. முதல் நூற்றாண்டு) சோழநாடு தென் வடல்என இரு கூறாகப்பிரிந்தது. வடபால் கொண்டது தொண்டை நாடு. தென் பால் பழைய சோழ நாடென வழங்கலாயிற்று. இந்த இளந்திரையன் வழி வந்த தொண்டையர் "பல்லவர்கள்" என்று தொல்காப்பியம் பொருளதிகார உரையில் உள்ளது.

தொண்டை மண்டலம் முழுவதும் நாடோடி மக்களான அருவான் (அ) குறும்பர்கள் வசித்து வந்தனர். இவர்களுக்குக் குடிவாழ்வு கொடுத்தவன் கரிகாலனே. தொண்டை நாட்டை 24 கோட்டங்களாகப் பிரித்ததில் வேங்கடம் ஒரு கோட்டம் ஆனது. அதில் அடங்கிய நாடுகள் குடகரை-(1) பொத்தப்பி-(2) தொண்டைமான் (3)

திருப்பதி ஸ்தல புராணத்தில் தொண்டைமான் என்கிற அரசனின் பெயர் கண்டுள்ளது. இந்தத் தொண்டைமான்தான் சரித்திரத்தில் கூறப்படும் தொண்டைமான்— தண்டிராயன் – இளந்திரயன் என்ற அரசன் ஆவான். இந்த மலைநாடு ஒரு விஷேசமான ஜனக்கூட்டத்தாரின் இருப்பிடமாக இருந்து வந்திருக்கிறது. பொத்தப்பி நாட்டில் திருத்தொண்டர் கண்ணப்பர் பிறந்தார்.

கி.மு. 5ஆம் நூற்றாண்டுக்கு முன்பே பிளந்த மலைக் கற்களைக் கொண்டு கட்டப்பட்ட ஆலயம் வேங்கட மலையில் சிறிய அளவில் இருந்திருக்க வேண்டும். அருகில் குளமும் இருந்திருக்க வேண்டும். இந்தக் கோயிலில் குடிகொண்டிருந்த வேங்கடநாதன்தான் கி. பி. 2ஆம் நூற்றாண்டில் இயற்றப்பட்ட சிலப்பதிகாரத்தில் வேங்கட மலையை நெடியோன் குன்றம் எனப்பாடப்பட்டுள்ளது. "நெடியோன்" என்றால் "உயர்ந்தோன்" எனப் பொருள். அது உலகளந்த திருமாலையே குறிப்பது. திருவேங்கடப் பெருமாளை வாமன ரூபியாகவும் பின் உலகளந்த திரிவிக்கிரம மூர்த்தியாகவும் கொண்டு ஒரு காலத்தில் முன்னோர் வழிபட்டு வந்தனர்.

பகவானின் லீலைகளைக் கண்ணாரக் கண்டு பழங்கால கட்டிடக் கலையின்படி ஏற்கனவே இருந்த கற்கோயிலை தொண்டைமான் தன் அரசு காலத்தில் (கி.பி. முதல் நூற்றாண்டு) சற்று விரிவாகப் புதுப்பித்திருக்க வேண்டும். இறைவன் அங்கே ஆயிரமாண்டுகளுக்கு மேலாக கோயில் கொண்டிருக்கின்றான் என்றும், விக்கிரகம் சுயம்பு என்றும் கி.பி. 8ம் நூற்றாண்டு கல்வெட்டு ஒன்றில் காணப்படுகிறது.

குருக்ஷேத்திர மகாபாரதப் போர் கி.மு. 950ஆம் ஆண்டு நடைப்பெற்றதாகச் சரித்திர ஆசிரியர்கள் கூறுகிறார்கள். தொல்காப்பியர் காலத்தில்(கி.மு. 7ஆம் நூற்றாண்டு) திருமால் வழிபாடு இருந்திருக்கிறது. அது பல தேவன் வழிபாடு, கண்ணன் வழிபாடு ஆகும். கிருஷ்ண பரமாத்மாவின் அரும்பெருஞ் செயல்கள், மறுமைப்பேற்றுக்குரிய உத்தம தத்துவங்களை கீதை மூலம் உலகோர்க்கு உணர்த்தி அருளிய கண்ண பிரானின் கதை பாரதப்போர் நடந்து சுமார் ஆறு நூற்றாண்டுகள் வரை செவி வழிச் செய்திகளாக இருந்து, பிறகு கி. மு. 3ஆம் நூற்

றாண்டின் இடையில் எழுத்துவடிவம் பெற்றிருக்க வேண்டும் என்று இலக்கிய நூல்கள் கூறுகின்றன.

நந்த வம்ச அரசன் :

வட நாட்டில் மகத தேசத்தைக் குறுகிய காலம் (கி. மு. 4ஆம் நூற்றாண்டு) ஆண்ட நந்த அரசர்களின் ஆதிக்கம் தென் பகுதியில் மைசூர் நாட்டின் வட எல்லையில் இருக்கும் குண்டாலா பிரதேசம் வரை பரவி இருந்ததாகச் சான்றுகள் உள்ளன. (Extended up to the Province of Kuntala in the North Mysore) நந்த அரசர்களின் ஒருவன் தரும குப்தன் என்பான் வேங்கட மலை வனப் பகுதிக்கு வேட்டைக்கு வந்து அங்கிருந்த வேடுவர்களைச் சந்தித்திருக்கிறான். மூங்கில் காடுகள் இந்த மலைப் பிரதேசத்தில் இருந்தன. யானைகள், சிறுத்தைகள், புலிகள் முதலிய துஷ்ட மிருகங்கள் நிறைந்திருந்தன. அரசன் வேட்டையாடி விட்டு மாலையில் ஓரிடத்தில் தங்கிய போது கரடி ஒன்று அரசனை துரத்தியதால் பயந்து ஓடி ஒரு மரத்தின் மேல் ஏறிக்கொண்டான். ஒரு சிங்கம் தன் இரைக்காக அதே மரத்தினடியில் மறைந்து இருந்ததை கரடி பார்த்துவிட்டது. அச்சம் மேலிட்டு மரத்தின் மேல் கரடியும் ஏறிக்கொண்டது. அரசனும், கரடியும் தங்களுக்குள் ஒப்பந்தம் செய்து கொண்டார்கள். அதாவது கரடி முதல் பாதி இரவு வரை தூங்காமல் விழித்திருக்க வேண்டும்; மறுபாதி இரவில் அரசன் விழித்துக் கொண்டிருக்க வேண்டும்.

அவ்விதமே முதல் பாதி இரவில் தூங்க கரடி பாதுகாப்பாக இருந்தது. அரசனை கீழே தள்ளிவிடு என்று சிங்கம் கரடியைப் பார்த்துச் சொன்னது. அவ்விதம் செய்யாமல் கரடி தன் சத்தியத்தைக் காப்பாற்றிக்கொண்டது. மறுபாதி இரவில் கரடி பயமின்றி நிம்மதியாக தன் தலையும், இரு தோள்களும் அரசனின் மடிமேல் வைத்துக்கொண்டு தூங்கிக் கொண்டிருக்கையில் நன்றி கெட்ட அரசன் சிங்கத்துக்கு இரையாகக் கரடியைக் கீழே தள்ளிவிட்டான். உடனே கரடிக்கு விழிப்பு வந்து யக்ஷனாக மாறியது. நம்பிக்கைத் துரோகம் செய்த அரசனை "மதிமயங்கி உன் மத்தனாகி அலையக் கடவாய்" என்று சாபமிட்டு விட்டது. இந்த விஷயம் காட்டில் சந்நியாசியாக வாழ்ந்து வந்த அரசனின் தந்தைக்குத் தெரிந்தது. அரசன் ஜைன மதத்தைச் சேர்ந்தவன். அரசனின் தந்தை அங்கு கோயில் கொண்டிருக்கும் ஸ்ரீனிவாச மூர்த்தியின் மேல் பாரத்தைப் போட்டு அருகிலிருந்த குளத்தில் தன் மகனை மூழ்கும் படிச் செய்வித்து தியானம் செய்ய சாப விமோசனம் ஆகிவிட்டது. அந்தச் சிறிய குளம்தான் இன்று இருக்கும் சுவாமி புஷ்கரணி குளம். இந்தக் கதை கி.மு. 2ஆம் நூற்றாண்டில் இயற்றப்பட்ட ஸ்கந்தபுராணத்தில் கூறப்பட்டுள்ளது. ஆகவே குளமும் கோயிலும் கி. மு. 5ஆம் நூற்றாண்டுக்கு முன்பே இருந்திருக்கின்றன என்று நன்கு அறியக்கூடும். காலத்தின்நிகழ்ச்சிகளுக்குத்தனி மனிதர்களின் தொடர்பைக் காட்டுகிறது. வரலாற்றுக்கு முற்பட்ட காலத்தில் அங்கு எழுந்தருளியிருந்த இறைவன் வேங்கடநாதனுக்கு படிமை வைத்து ஆலயம் கட்டி அங்கே வசித்து வந்த முனிவர்கள், வேடுவர்கள் முதலியோர் இறைவனை வழிபட்டு வந்தார்கள் என்று கூறலாம்.

கி.பி. 2ஆம் நூற்றாண்டு முதல் பிற்கால அரசர்கள் மற்றும் பெருங்குடி மக்கள் இந்தப் பழங்கோயிலையும், குளத்தையும் செங்கல்லாலும், செதுக்கிய கருங்கற்களாலும் புதுப்பித்தும், விரிவுபடுத்தியும் இருக்கிறார்கள். கி.பி. 5ஆம் நூற்றாண்டு முதல் 8ஆம் நூற்றாண்டு வரை வாழ்ந்த ஆழ்வார்கள் இந்தக் கோயிலைத் திருமால் கோயிலாகவே பாடியுள்ளார்கள்.

ஸ்ரீ ராமானுஜர் (கி.பி, 1017—1137)

தென் நாட்டில் வைணவத்தை நிலைபெறச் செய்து, கோயில்களுக்குரிய சிறப்பிடத்தை சுவைபெறு மாறுசெய்த ஸ்ரீராமானுஜர் திருமலை வேங்கடநாதன் குடிகொண்டிருக்கும் கோயிலை நன்கு பராமரிப்புச்செய்து விரிவு படுத்தினார். இவர் காலத்தில் இந்தக் கோயிலைப் பற்றிச் சைவர்களுக்கும் வைணவர்களுக்கும் சர்ச்சை எழுந்தது. சைவர்கள் கோயிலுக்குள் இருந்த மூர்த்தியை ஹரிஹரன் என்று வாதாடினார்கள். விஷ்ணு சிவன் ஆகியோரின் ஆயுதங்களை ஆலயத்திற்குள் வைத்து (சங்கு சக்கரம், சூலம், உடுக்கை முதலியன) கதவை இரவில் மூடிவிடுவதென்றும் எந்த ஆயுதங்களை இறைவன் அணிந்து கொள்ளுகிறாரோ அந்த மூர்த்தியை அங்கீகரிக்கப்பட வேண்டுமென்று ஒப்பந்தம். மறுநாள் கதவைத்திறந்து நோக்குகையில் விஷ்ணு சின்னங்களோடு காட்சியளித்தார் வேங்கடநாதன். திருப்பதி அநாதி காலமாகவே விஷ்ணு ஸ்தலம் என்று நிரூபணம் ஆகிவிட்டது.

கோயிலில் ஸ்ரீராமானுஜர் வைகானச ஆகம விதிகளின்படி தினசரி பூஜை முறைகள், சேவைகள் அமைத்துக்கொடுத்ததுடன் ஆனந்த நிலைய விமானத்தையும் சீர்திருத்தினார். பிற்கால மன்னர்கள் அரசில் பதவி வகித்தவர்கள், செல்வந்தர்கள் கோயிலுக்குப் பலநற்காரியங்கள் செய்திருக்கிறார்கள்.

திருமலை என்ற சிறப்புப்பெயர் வேங்கடமலைக்கே உரியது. தென்னாட்டில் மொகலாயர்களின் பல படையெடுப்புகளில் திருப்பதி கோயில் எந்தப் பாதிப்பும் அடையாதது குறிப்பிடத்தக்கது.

திருப்பதி என்னும் வைகுண்டபதியில்தான் "நித்ய கல்யாணம் பச்சை தோரணம்" எனும்படி காணும் திரு விழாக்கள் நடைபெற்று வருகின்றன.

✱

மதிப்புரை :

# பன்னீராயிரப்படி - ஓராய்வு

எழுதியவர்: டாக்டர். எம. வரதராஜன் எம். ஏ பி.ஹெச்டி,

கிடைக்குமிடம் : 60, பத்மாவதிபுரம், திருச்சானூர் ரோடு, திருப்பதி - 517502.

விலை ரூ. 70/-

பிரபன்னஜன கூடஸ்த்தரான நம்மாழ்வார் அருளிய, ஸாமவேத ஸாரமாகிய திருவாய் மொழிக்கு ஐந்து மஹான்கள் உரைகள் எழுதி, அனைவரும் திருவாய் மொழியின் ஆழ் பொருளை அறிந்துகொள்ளுமாறு உதவி, திருவாய் மொழியை வளர்த்திருக்கிறார்கள். பிள்ளான், நஞ்சீயர், பெரியவாச்சான் பிள்ளை, வடக்குத் திருவீதிப்பிள்ளை, மணவாளயோகி ஆகிய ஐவரையும் 'திருவாய்மொழியைக்காத்த குணவாளர்' என்று மணவாளமாமுனிகள் கொண்டாடுகிறார். மணவாளயோகி எனப்படுகிறவர் ஞானக்கடலாக விளங்கிய அழகிய மணவாளச்சீயர். திருவாய் மொழிக்குப் பன்னீராயிரப்படி என்ற உரை எழுதியவர் இவரே.

இவ்வுரையாசிரியர் தன்னுடைய 32 ஆம் வயதில் கல்வி அறிவு பெறத் தொடங்கி பன்மொழிப் புலமை பெற்றுச் சிறந்த உரையாசிரியராக விளங்கியதைச் சுட்டிக்காட்டும் இவ்வாய்வாளர், 'கல்வி கற்க வயது வரம்பு இல்லை. முயற்சி வெற்றி தரும்' என்பதை இக்கட்டுரையின் வாயிலாக உணரச் செய்துள்ளார்.

திருவாய் மொழியின் உரைகளில் ஆறாயிரப்படி ஸ்ரீ விஷ்ணு புராணத்தையும், ஒன்பதினாயிரப்படி ஸ்ரீ ராமாயணத்தையும், இருபத்து நாலாயிரப்படி வால்மீகி ராமாயணத்தையும், ஈடு முப்பத்தாறாயிரப்படி ச்ருதப்ரகாசிகா (வியாக்யானத்தையும்) வையும் எண்ணிக்கையிலும் அமைப்பிலும் ஒத்திருக்கின்றன. பன்னீராயிரப்படி, பிள்ளான் உரையைப்போல் இருமடங்கும், பெரியவாச்சான் பிள்ளை உரையில் பாதியளவுமாக அமைந்துள்ளது என்பதை ஆசிரியர் காட்டியுள்ளார்.

அழகிய மணவாளச்சீயர், த்வய மந்திரத்தின் பூர்வ கண்டத்திற்குப் பொருள் கூறும்போது 'திருவோடு கூடிய நாராயணனின் திருவடிகளை உபாயமாகப் பற்றுகிறது' என்று தன்னுடைய தத்துவ தீபிகையில் எழுதியுள்ளதைக் காட்டி, 'திருநாராயணபுரம் திருநாராயணனின் திருவருளால் தான் பிறந்தமையை உணர்த்துகிறார்' என்று ஆய்வாளர் எழுதி இருப்பது நன்கு சுவைக்கப்பாலது.

'பொலிக பொலிக பொலிக' 'கண்டோம் கண்டோம்' 'அவனே அவனும் அவனும் அவனும்' என்று திருவாய் மொழியின் வாக்கியங்களை எடுத்துக் காட்டாகக் கூறி, ஸம்ஸ்கிருத வேதம் போல் திருவாய்மொழி தமிழ்வேதம் என்று கூறியுள்ளது மிகவும் அழகியதாகும்.

சீயர் அர்த்த பஞ்சக ரீதியில் திருவாய் மொழியைப் பகுத்துக்காட்டியுள்ளதையும், இவரது காலத்தில் வழங்கிய 'ஏறிட்டகட்டி, இறாயாதே பரகுபரகாற்று' முதலிய தமிழ்ச் சொற்களையும், பல உவமைகளையும், வடசொற்களுக்குரிய தமிழாக்கத்தையும், சில பாடல்களின் தொடருக்குப் பொருத்தமான அக்கால (உணவு, தொழில், விளையாட்டு ஆகிய) பழக்க வழக்கங்களையும் ஒவ்வொரு பாசுரத்திற்கும் உரையாசிரியம் கூறும் இலக்கணப் பாங்கினையும், இவரது இலக்கணப்புலமையையும், பல நூல்களிலிருந்து மேற்கோள் காட்டும் நுண்ணிய அறிவுத் திறனையும் இவ்வாய்வாளர் தம் நூலில் விளக்கிக் கூறியுள்ளார்.

பன்னீராயிரப்படியை ஆய்வதற்குரிய திறனையும், ஞானத்தையும் அளித்த ஸ்ரீமன் உ. வே. வித்வான் சிரோன்மணி. தி.அ.கு. கிருஷ்ணமாச்சாரியார் ஸ்வாமி, ஸ்ரீமான். உ. வே. நியாயவேதாந்த வித்வான் கே.வரதாசாரியார் ஸ்வாமி ஆகியோரையும் நூல் வெளிவர உதவிய பேராசிரியர் இரா. அரங்கராசன், பேராசிரியர். பொன். சௌரிராஜன், பேராசிரியர். ஞானசுந்தரம் போன்றவர்களின் பெயரையும் நன்றிக் கடனாக இந்நூலில் ஆசிரியர் குறிப்பிடுகிறார் சிறந்த உரையாசிரியராக விளங்கிய பிள்ளைலோகம் ஜீயரின் யதீந்த்ர ப்ரபாவத்திலிருந்து பல மேற்கோள்களை ஆய்வாளர் தம் நூலில் எடுத்துக் கூறியது பாராட்டுதற்கு உரியதாகும். பன்னீராயிரப்படியைக் கொண்டு திருவாய் மொழிப் பொருளை அறிந்து கொள்ளவேண்டும் என்று ஆவலுடைய அனைவர்க்கும் ஆசிரியர் வரதராசனார் பரிச்ரமப்பட்டு எழுதிய இவ்வாய்வு நூல் மிகவும் உதவியாக இருந்து இன்பமளிப்பது உறுதி.

பிள்ளைலோகம் ஸ்தலசயனத்துறைவார்



# சக்தி வழிபாடு

**முன்னுரை :**

சக்தி வழிபாடு, மிகத் தொன்னெடுங்காலம் முதலே நம் இந்திய நாட்டில் இனிது நிகழ்ந்து வருகிறது. மொகஞ்சோதாரோ என்னும் இடத்தில் நிகழ்த்தப்பெற்ற அகழ்வராய்ச்சிகளில் கிடைத்த பல பொருள்களில், அம்பிகை ஆகிய உலக அன்னையின் மண் சிலைகள் பலவும் கூட உள்ளன. ஆராய்ச்சியர்களின் கருத்தின் படி சிந்துவெளி நாகரிக காலம் ஏறத்தாழக் கி. மு. 4000 ஆண்டுகளுக்கு முற்பட்டது என்று புலனாதலின், சக்தி வழிபாடு அதற்கும் முன்னரே பழமையுடையது என்பது தெரியலாம்.

சிந்துவெளியிற் கிடைத்த அம்பிகையின் சிலைகளைப்போலவே பாரசீகம், ஏஜியன், ஏலம், மெசபட்டோமியா டிரான்ஸ்காஸ்பியா, துருக்கி, சிரியா பாலஸ்தீனம், சைப்ரஸ், கிரீட்பாலகன், எகிப்து முதலிய நாடுகளிற் கிடைத்த சிலைகளும் இருப்பதனால், அம்பிகை வழிபாடு மிகப் பழங் காலத்திலேயே பல நாடுகளிலும் தொன்று தொட்டே பரவியிருத்தல் வேண்டுமென்று, சர் ஜான் மார்ஷல் என்னும் பேரறிஞர் ஆராய்ந்து கூறுகின்றார்.

**பல நாடுகளில :**

சக்தி வழிபாடு, நம் இந்திய நாட்டில் மட்டுமேயன்றி உலகின் பல பகுதிகளிலும் பரவியிருந்தது எனத் தெரிகின்றது. நாகரிக மேம்பாட்டில் மிகவும் சிறப்பும் பழமையும் மிக்குத் திகழ்ந்திருந்த எகிப்து நாட்டு மக்கள், முழுமுதற் கடவுளை ஓஸைரீஸ் (osiris) என்னும் தந்தையாகவும், ஐஸிஸ் (isis) என்னும் தாயாகவும் வழிபட்டு வந்தனர்.

எகிப்துநாட்டு மக்களைப்போலவே நாகரிகச் சிறப்புடன் திகழ்ந்திருந்த பாபிலோனிய மக்கள், எல்லாம்வல்ல இறைவனை ஏ (Ea) எனத் தந்தையாகவும் தவ்நிகா (Davnika) எனத் தாயாகவும் வைத்துப் போற்றி வணங்கி வந்தனர்.

சாலடியார் என்னும் பழம்பெரும் நாகரிக மக்கட்டொகுதியினரும், ஊர் (Ur) என்னும் தம்முடைய தலைநகரில் தாம் எழுப்பிய மாபெருங் கடவுளை ஸமஸ் (samas) எனப் பெரிய அப்பன் ஆகவும், இஸ்தர் (istar) எனப் பெரிய அன்னையாகவும் அமைத்து வழிபாடுசெய்து போந்தனர்.

சுமேரிய நாட்டு மக்கள் நம்மைப் போலவே, அன்னை அல்லது சக்தி வழிபாடு உடையவர்களாக விளங்கியிருந்தனர். சுமேரிய நாகரிகம், எகிப்திய நாகரிகத்துக்கும் காலத்தால் மிகப்பழமையானது.

புலவர். பொன், சுப்பிரமணியன்,
எம்.ஏ.,பி.லிட்.
திருக்கண்ணபுரம்

தொன்மை மிகவும் வாய்ந்த சுமேரிய நாட்டு மக்களுக்கும், இந்தியச் சிந்து வெளி மக்களுக்கும் இடையே நிலவி வந்த சக்தி வழிபாட்டிற் பலதிற ஒப்புமைப் பண்புகள் இருந்தமை புலனாகின்றது.

**சக்தி வழிபாடு :**

சிலர் கடவுட் பெரும் பொருளை 'அது' என்று சுட்டுகின்றனர். மற்



றும் சிலர் 'அவன்' எனக் குறிப்பிடு கின்றனர். 'அது' என்று சுட்டினால் கடவுள் அஃறிணைப் பொருள் என முடியும். அவன் என்றாலோ, கடவுள் ஆணாகமட்டுமே இருப்பதாகக் கொள்ளப்படும். கடவுள் எல்லாமாயும், அல்லவாயும் நிற்கும் இயல்புடையவர் ஆதலின், அவரை நாம் "அவன் அவள் அது" என்று மூன்று நிலைகளிலும் குறிப்பிடுதல் பொருந்தும். இறைநிலையை 'அவள்' எனத் தக்கவாறு கொண்டு வழிபடும் முறையே சக்தி வழிபாடும் ஆகும்.

*சமுதாய வாழ்வு:*

கடவுட் பெரும் பொருளைப் பெண்ணாக, பெண் வடிவத்தில் வைத்துப் போற்றுதலையே, நாம் சக்தி வழிபாடு என்கிறோம். சமுதாய வாழ்விலும், குடும்பவாழ்விலும் பண்டைக் காலம் முதலே இந்தியப் பெண்மணிகள் சிறப்பிடம் பெற்றிருந்தனர். தாயாகவும், மகளாகவும் சகோதரியாகவும், மனைவியாகவும் உலகியல் வாழ்வில் பெண்கள் பல்வேறு நிலைகளில் சிறப்புற்றுத் திகழ்ந்து வருகின்றனர். ஒரு பெண்ணின் சிறப்பும் கடமையும் பொறுப்பும், குடும்ப வாழ்வில் படிப்படியே வளர்ந்தோங்குகின்றன.

பெண்மை நலங்கள் அனைத்தும் தாய்மை நிலையிலேயே சிறந்தோங்கி ஒளிவீசித் திகழ்கின்றன. அன்பும் அருளும் பரிவும் இரக்கமும் தூய்மையும் மென்மையும் தியாகமும் ஆகிய சிறந்த தெய்வீகப் பண்புகள் அனைத்தும் தாயிடமே ஒருங்கே அமைந்து நிலவுகின்றன. தாய்மையின் சிறப்பனைத்தும் தகவுணர்ந்தே, நம் முன்னைச் சான்றோர்கள் கடவுளைத் தாயாக வழிபட்டு வரலாயினர். பெண்ணினத்தின் எண்ணரிய பெருஞ் சிறப்புக்களையெல்லாம் இனிதுணர்ந்து போற்றிய சமுதாய வாழ்வின் விளைவே, சக்தி வழிபாடு எனலாம்.

அன்னை மரியாள் சிறப்பைப் புகழ்ந்து கொண்டாடுவதன் மூலம் கிறித்துவ சமயமும், தாரா தேவியின் புகழைப் போற்றுவதன் மூலம் பௌத்த சமயமும்கூட, ஒருவகையில் தாய்மைத்தெய்வத்தின் தன்னிகரற்ற மாட்சிமையினை உடன்பட்டுத் தழுவிக் கொண்டுள்ளன எனப் பேரறிஞர் திரு. எஸ். இராதாகிருஷ்ணன் அவர்கள் குறிப்பிடுகிறார்.

*தாயின் பரிவு :*

சக்தியை உலகுயிர்களுக்குத் தாயாகச் சமய நூல்கள் போற்றுகின்றன. தாய் தன் குழந்தைகள் செய்யும் தவறுகளையெல்லாம் மன்னித்து, அன்பு செலுத்திப் பரிவு காட்டி நலஞ் செய்கின்றாள். அவ்வாறே சக்தியாகிய தேவியும் உலகுயிர்கள் இயற்றும் பிழைகள் எல்லாம் பொறுத்து அருள்புரிகின்றாள்.

தந்தை தன் பிள்ளைகள்பாற் சினங் கொள்ள நேர்ந்தவழி, தாய் பிள்ளைகளின் சார்பிற் பரிந்துரையாடித் தந்தையின் சினத்தைப் போக்கி நன்மை புரிகின்றாள்.

ஆய்முத்துப் பந்தரின் மெல்லணை
மீதுன் அருகிருந்து,
நீமுத்தம் தாஎன் றுவா கொஞ்சும்
வேளையில், நிதத நித்தம்
வேய்முத்த ரோடென் குறைகள்
எல்லாம் மெல்ல மெல்லச் சொன்
னால்
வாய் முத்தம் சிந்திவிடுமோ ?
நெல்வேலி வடிவம்மையே !

எனக்கவிஞர் ஒருவர் கவினுறப் பாடுவதுபோல, இறைவனாகிய தந்தை உலகுயிர்கள் ஆகிய மக்கள் செய்யும் தீவினைகளுக்காகச் சினங்கொண்டு ஒறுத்தொழிக்காதபடி, தாயாகிய அம்பிகையே தன் பெருங்கருணையாற் பரிந்துரை கூறித் தடுத்துக் காப்பாற்றியருள்கின்றாள்.

*தென்னகத்தின் பண்பாடு :*

உலகுயிர்களின் உய்வு கருதி, இறைவனின் திருவருள் செயற்படும் இவ்வியல்பினைத் தாயின் தன்னளியோடு ஒப்பிட்டு ஆழ்வார்களும், நாயன்மார்களும் தமது செந்தமிழ்த்

தெய்வீகப் பாடல்களிற் சிறந்தெடுத்துப் பாடிப் புகழ்ந்து போற்றியுள்ளனர்.

சிவபிரானுக்கு உமையம்மையும், திருமாலுக்குத் திருமகளையும், பிரமனுக்குக் கலைமகளையும் சக்தியாக வைத்துத் தாய்மைத் தெய்வத்தைப் போற்றும் வழிபாட்டு முறை, முதன் முதலில் தென்னிந்தியாவிலேயே தோன்றியதென்றும், இது தென்னகத்தின் சிறப்பியற் பண்பாடு என்றும் ஆராய்ச்சிப் பேரறிஞர் திரு. சுநீதி குமார சட்டர்ஜி அவர்கள் குறிப்பிடுதல் ஈண்டு நாம் உணர்ந்து இன்புறுதற்குரியது.

**இளங்கோவடிகள் :**

தமிழ்நாட்டில் பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே சக்தி அல்லது தேவி வழிபாடு சிறப்புற நிகழ்ந்து வந்தது. பாலைத்திணைக்குரிய தெய்வமாகத் துர்க்கை (கொற்றவை) போற்றப் பெற்றாள். சிலப்பதிகாரத்தில் "வேட்டுவ வரி" என்னும் பகுதியில் இளங்கோவடிகள் சக்தி வழிபாட்டின் இயல்பையும், அதன் சிறப்பையும் அழகுறப் பாடியருளியுள்ளார். சக்தி வழிபாடு சிவ வழிபாட்டோடு தொடர்புடையதாகலின், சிவபெருமானுக்குரிய நெற்றிக்கண்—நீலகண்டம்—மேரு மலையாகிய வில்லை வளைத்தல்—சூலம் ஏந்துதல்—யானையின் தோல் போர்த்தல் முதலிய பண்புகளை அம்பிகைக்கும் உரியனவாக வைத்து,

'நுதல் கிழித்து விழித்த இமையா
நாட்டம்'
'நஞ்சுண்டு கறுத்த கண்டு'
'அரவு நாண் பூட்டி நெடுமலை
வளைத்தோள்'
'வளையுடைக் கையிற் சூலம் ஏந்தி'
'கரியின் உரிவை போர்த்த அணங்கு'

என்றெல்லாம் இளங்கோவடிகள் சக்தியைக் குறித்துப் பாடுகின்றார். மேலும் 'அமரி—குமரி—கவுரி—சமரி—சூலி—மாவலவற்கு இளங்கிளை

## "வேங்கடேசனும் வேங்கடநாதரும்"

நீங்காது உலகில் பாவம்
நெடுநாள் நிற்கும் என்பார்
தாங்காது உலகம் இனிமேல்
தானமும் தவமும் குறையுமென
ஏங்கிடும் உத்தமர் கவலை
நீங்கியே வாழ்ந்திட வையத்தில்
வேங்கடவன் பாதம் பணியும்
வேங்கட நாதர் வந்தார்.

கீதையின் நாயகன் அவதரித்த போதெல்லாம்
கண்ணனின் அருச்சுன னாகவே
சாதனை படைத்த நரன்எனும் தத்துவம்
சரித்திரத்தே தெய்வீகம் காட்டிடும்
நாதனை நாடிடும் கற்புடை நங்கைதன்
நல்ல உள்ளம் போலவே
வேதனை மிகுந்திடும் பிறவி நீங்கிட
வேங்கடவன் தாளில் சேர்வார்

பார்த்தனுக் காகவே பரந்தாமன் தோன்றினான்
பளிங்கு உள்ளம் படைத்த
தீர்த்தன் பிரகலாதனைக் காக்கவே
தூணிடைத் தோன்றிய நரசிங்கன்
ஆர்த்த பொருள் அனைத்திலும்
அமர்ந்து காத்து இருந்தனன்
சீர்த்த தொண்டன் வீடணனைக் காக்கவே
சிலமிகு இராமன் நடந்தான்

ஏழுமலை என்பது எம்மிறை வாழுமலை
ஏந்தலின் திருவடிகள் நின்றமலை முகில்
சூழுமலை பொற்கோயில் ஒளிரும் மலைதான்
சுந்தர வதனம் அருளும்மலை புகழ்
நீடுமலை தன்னில் பிரகலாத ராயர்
இராகவேந் திரகுரு ராயரான நிலையே
சூடும்மலை அவர்புகழை வேங்கடவன் அருளோடு
குருவருளும் திகழும்மலை என்றும் பணிவோம்

வருந்தியவர் வருகின்றார் இராகவேந்திர ரைநாடி
வனமெனும் பிருந்தா வனத்தே பணிகின்றார்
அருந்தியவர் அமுதினை என்றே மகிழ்கின்றார்
அருளைப்பெற்றவர் பாவததைக் களைகின்றார்
திருந்தியவர் நல்லதொரு பாதையில் நடக்கின்றார்
தினமும் வேங்கட மலையைத் தொழுகின்றார்
பொருந்திய வைணவம் வளர்க்கும் குருராஜர்
பொன்னலர் வேங்கடவன் வரமாய்த்
திகழ்கின்றார்

—என். வி. சிவகாமசுந்தரி
திருவள்ளூர்.

## புதிய சேவை

திருமலை திருப்பதி தேவஸ்தான மேலாண்மையின் கீழ் செயற்படும் கீழ்வரும் கோயில்களில் நபர் ஒருவர் ரூ. 5/- செலுத்தி வாராந்திர அபிஷேக சேவைகளைக் கண்டு களிக்கலாம்.

1) ஸ்ரீ வேதநாராயணசுவாமி கோயில், நாகலாபுரம்.
2) ஸ்ரீ கல்யாண வேங்கடேஸ்வரசுவாமி கோயில், நாராயணவனம்
3) ஸ்ரீ வேணுகோபாலசுவாமி கோயில், கார்வேட்டுநகரம்.
4) ஸ்ரீ பிரசன்ன வேங்கடேஸ்வரசுவாமி கோயில், அப்பளாயகுண்ட்டா.
5) ஸ்ரீ வேங்கடேஸ்வரசுவாமி கோயில், ஸ்ரீநிவாசமங்காபுரம்.
6) ஸ்ரீ வேங்கடேஸ்வரர் மற்றும் ஸ்ரீ சந்திரமௌளீஸ்வர சுவாமி கோயில்கள், ரிஷிகேஷ்.

(தங்கை) ஐயை–செய்யவள்–வெய் யாள்–தடக்கைப் பாய்கலைப் பாவை–அருங்கலைப்பாவை–தமர் தொழ வந்த குமரி' என்றும் பல வகைகளில் தேவியின் சிறப்பைச் சிலப் பதிகாரம் போற்றுகின்றது.

**சிலப்பதிகாரம் :**

செந்தமிழ்ப் பெருங்காப்பியம் ஆகிய சிலப்பதிகாரம் என்னும் சிறந்த பெருநூலில், சக்தி வழிபாடு பற்றிய பலதிறக் குறிப்புகள் அமைந்திருக்கக் காண்கின்றோம். கூடல் மாநகரிற் கோவலன் கொலையுண்டு மடிகின் றான். கணவன் கொலையுண்ட செய்தி அறிந்த கண்ணகி பெரிதும் வருந்துகின்றாள். பாண்டிய வேந் தனைக் கண்டு, தன் கணவன் 'கள்வன் அல்லன்' என்று மறுத்துரைத்துத் தெளிவுறுத்த விரும்புகின்றாள். பாண்டியனின் அரண்மனை நோக்கிச் செல்கின்றாள். அங்கிருந்து வாயில் காவலனை விளித்து, அரசனுக்குத் தன் வருகை பற்றி அறிவிக்குமாறு பணிக்கின்றாள். அவன் அவளது தோற்றமும் சீற்றமும் கண்டு அஞ்சி நடுங்கி ஓடோடிச் சென்று, அரச னுக்குக் கண்ணகியின் வருகைப் பற்றித் தெரிவிக்கின்றான். அப் பகுதியில்,

"அடர்த்தெழு குருதி அடங்காப் பசுந் துணிப்
பிடர்த்தலை பீடம் ஏறிய மடக்கொடி
வெற்றிவேற் றடக்கைக் கொற்றவை யல்லள் !
அறுவர்க்கு இளைய நங்கை ! இறை வனை
ஆடல்கண் டருளிய அணங்கு ! சூருடைக்
கானகம் உகந்த காளி ! தாருகன்
பேருரம் கிழித்த பெண்ணும் அல்லள் !
செற்றனள் போலும் செயிர்த்தனள் போலும் !

எனவரும் வரிகளால், சக்தியின் வெவ் வேறு திறக்கூறுகள் ஆகிய கொற் றவை, பிடாரி, பத்திரகாளி, காளி, துர்க்கை என்பன சிலப்பதிகாரத்தில் குறிப்பிடப்பெற்றிருத்தல் காண லாம்.

**நவராத்திரி :**

நவராத்திரி என்பது, சக்தி வழி பாடு குறித்துச் சிறப்புறக் கொண் டாடப்பெறும் விழாவாகும். ஒவ் வோர் வருடம் புரட்டாசி மாதத்தில், வளர்பிறைப் பிரதமை முதல் நவமி வரை ஒன்பது நாட்கள் கொண் டாடப்படுதலினால் இது நவராத்திரி என வழங்கப்பெறும். பத்தாம் நாள் ஆகிய விஜயதசமியையும் விழா நாளாகச் சேர்த்துக் கணக்கிட்டுத் தசரா என்றும் இவ்விழாவைக் குறிப் பிடுவதும் உண்டு. உலகத்தைத் துன் புறுத்தி வந்த மகிஷாசுரன் என்னும் கொடிய அரக்கனை எதிர்த்து ஒன்பது நாட்கள் போரிட்டு, தசமி ஆகிய பத்தாம் நாளில், அம்பிகை அவனை அழித்து வெற்றி கொண்டனள் ஆதலின், அந்நாளை விஜய தசமி எனச் சிறப்பித்து வழங் குவர்.

சிலப்பதிகாரத்தில் 'வேட்டுவவரி' என்னும் பகுதியில் மகிஷாசுரன் என் னும் எருமைத் தலை அரக்கனை அழித்து, வெற்றி கொண்ட கொற் றவை ஆகிய துர்க்கையினைப்பற்றிய பலகுறிப்புகளும் பாடல்களும் காணப் படுகின்றன.

**மகிஷாசுரமர்த்தனி**

துர்க்கை என்னும் கொற்றவை யானவள், தனது கணவராகிய சிவ பெருமானைப்போல ஆனைத் தோலைப் போர்த்துக் கொண்டும், புலியின்தோலை ஆடையாக அணிந்து கொண்டும், மகிஷாசுரன் ஆகிய எருமை அரக்கனின் தலையினை, மிதித்துக்கொண்டு, தேவர்கள் எல் லாம் வணங்கும்படி, மறை நூல்களுக் கெல்லாம் மறைபொருளாகி, ஞானக் கொழுந்தாகக் காட்சி தருகின்றாள்.

ஆனைத்தோல் போர்த்துப் புலியின் உரியுடுத்துக்
கானத்து எருமைக் கருந்தலை மேல் நின்றாயால்
வானோர் வணங்க மறைமேல் மறை யாகி
ஞானக் கொழுந்தாய் நடுக்கின்றி யேநிற்பாய் !

வளையல்களை அணிந்த கையில் வாளை ஏந்திக்கொண்டு, வலிமை மிக்க மகிஷாசுரனை அடக்கி வென்று, கலைமானை ஊர்தியாக ஏற்று, மும் மூர்த்திகளும் தங்கள் இதய கமலத் தில் தியானித்து வணங்கி வழிபடும் அருட்பெருஞ்சோதி விளக்காக அம்பிகை விளங்குகின்றாள்.

(32-ம் பக்கம் பார்க்க)



# சந்நியாசம்

“காதலித்தப் பெண்ணைக் கை பிடிக்க முடியவில்லை என்ற தீராத கவலை” “கடன் தொல்லையால் வெளியில் தலைகாட்ட முடியவில்லை”, “பெண்டாட்டிப் பிள்ளைகளுடன் சண்டை, குடும்பமே ரணகளமாக இருக்கிறது”,—இப்படி விரக்திகளுக்கும் வாழ்க்கையில் ஏற்படும் வெறுப்புகளுக்கும் ஆட்பட்டு எல்லோரையும் எல்லாவற்றையும் விட்டுவிட்டு எங்கேயாவது ‘சந்நியாசியாக’ ஓடிவிடலாமா என்று முணுமுணுப்பவரை நாம் பார்த்திருக்கிறோம்.

எல்லாவற்றிற்கும் .மேலான உண்மைப் பொருளை உணர்ந்து, தான் செய்கின்ற தொழில்களில் எவ்விதப் பற்றும் கொள்ளாமல், செய்யவேண்டியவைகளை ஒழுங்காகச் செய்து, மனத்தை அடக்கி, ஆசைகளையும் உடமைகளையும் துறந்து தனக்காக இல்லாமல் பிறர் நலனுக்காக இருந்து அருட்கொடை கொடுக்கும் மகான்கள் பலரின் வாழ்க்கையில் சந்நியாசம் பெறுவதற்காக ஏற்படும் நிகழ்ச்சிகள் மிக்க சுவையாகவும், மிக்க அர்த்த புஷ்டியாகவும் இருக்கும்.

ஆதிசங்கரர், வித்யாரண்யர் ஆகியோர் வாழ்க்கையில் சந்நியாசம் வாங்கிக் கொள்வதற்கு முன் ஏற்பட்ட நிகழ்ச்சிகள் மிக்க பிரசித்தி பெற்றன. அது போன்றதே ஸ்ரீராமானுஜரின் பேரன்பைப் பெற்ற சீடர்களில் ஒருவரான கோவிந்தர் என்ற ‘எம்பார்’ சந்நியாசம் பெற்ற நிகழ்ச்சியாகும்.

எம்பார் சந்நியாச நிகழ்ச்சிக்கு முன் ஆதிசங்கரர், ஸ்ரீவித்யாரண்யர் சந்நியாசம் பெற்ற நிகழ்ச்சியை நோக்குவோம்.

தாம் சந்நியாசம் வாங்கிக் கொள்வதற்கு அம்மாவின் அனுமதியைப் பெற வேண்டும் என்பது ஆதிசங்கரரின் எண்ணமாகும். அம்மாவோடு குளிக்கப் போன பிரம்மச்சாரி சங்கரர் ஆற்றில் முதலையின் பிடிப்புக்கு வேண்டுமென்றே உட்பட்டார். தாயார் பதறிப்போனாள். ‘தாயே நீ பதற வேண்டாம். நான் சந்நியாசம் வாங்கிக் கொள்ள நீ அனுமதி தந்தால் முதலை என்னை விட்டுவிடும். ஏனென்றால் துறவு பெற்றுவிட்டால் அது மறு ஜன்மா போலாகும். இந்த ஜன்மாவில் முதலையின் பிடிப்புக்கு ஆளாக வேண்டும் என்று எனக்கு விதி இருக்கிறது. அடுத்த ஜன்மாவில் அது என்னைப் பாதிக்காது’ என்று சொல்லி தாயாரின் அங்கீகாரம் பெற்று சந்நியாசி ஆனார். ஆதிசங்கரர் சந்நியாசம் பெற்று பொது வாழ்க்கையில் ஈடுபட்டதால் ஹிந்து தர்மமே தழைத்து வளர்ந்தது.

---

திரு. சோ. ரங்கசாமி,
நாட்டரசன் கோட்டை.

---

ஹிந்து சாம்ராஜ்யத்தில் பண வசதி அதிகம் இல்லாது இருந்த சமயம், மாலிக்காபூர் போன்ற துருக்கர் தொல்லைகள், கொடுமைகள் நிகழ்ந்த காலம். வித்யாரண்யர் தனம் வேண்டும் என்று மஹாலெட்சுமியிடம் யாசிக்கும்போது “இந்த ஜன்மாவில் உனக்கு அருள்

செய்வதற்கில்லை" என்று மஹாலெட்சுமி பதில் அளித்தாள். இவரும் ஆதிசங்கரர் செய்த தந்திரத்தையே மேற்கொண்டார். சன்யாசம் பெற்றால் மறு ஜென்மா ஆகிவிடும் அல்லவா. உடனே சந்நியாச ஆசிரமம் வாங்கிக் கொண்டார். அதனால் அவருக்குக் கிடைத்த அளவிடமுடியாத செல்வம் ஹிந்து சாம்ராஜ்யத்தையே மேலோங்கி வருமாறு செய்தது.

சந்நியாசம் பெறுவதால், தான் எல்லாவற்றையும் துறப்பதால் உலகத்தார் அனைவரும் சகல சிரேயஸும் பெறுவதே மகான்களின் வாழ்க்கையில் முக்கிய குறிக்கோளாக இருக்கும்.

பூரி ஜகந்நாத திவ்ய தேசத்தில் பிரசித்தி பெற்ற எம்பார் மடம் உள்ளது. ஸ்ரீராமானுஜரால் கட்டப்பெற்று, இராமானுஜரின் சீடரான எம்பார் இங்கேதங்கி வைணவத்தைத் தழைக்க செய்து வந்ததால் எம்பார் மடம் என்று பெயர் பெற்றது.

எம்பாரின் இயற்பெயர் கோவிந்தர். கோவிந்தர் எப்போதும் தன் குரு ஸ்ரீ ராமானுஜரின் பணிவிடையே மிகச் சிறந்தது என்று எண்ணி வந்தார். குருவின் பணியிலேயே தன் முழு நேரத்தையும் செலவழித்தார். இல்லறத்தில் இருந்தாலும் துறவு வாழ்க்கை வாழ்ந்து வந்தார்.

எந்தத் தாய்தான் இதற்கு சம்மதிப்பாள். பேரனோ, பேத்தியோ எடுத்து உச்சி முகர்ந்து கொஞ்சி விளையாட வேண்டும் என்றுதான் எல்லா தாய்மார்களும் நினைப்பார்கள். அதே போலத்தான் கோவிந்தரின் தாயான த்யுதிமதி நினைத்து வந்தாள்.

த்யுதிமதி ஸ்ரீ ராமானுஜரின் சிற்றன்னையாவார். எனவே இராமானுஜரிடம் உரிமையுடன் இதனை விளக்க புறப்பட்டு விட்டாள். "கோவிந்தனின் மனைவி இப்போது வயது வந்த பெரியவளாகிவிட்டாள். எனவே கோவிந்தனை மனைவியிடம் கணவனுக்கு உரிய கடமையுடன் நடந்து கொள்ளச் சொல். நான் இதுபற்றி அவனிடம் கூறியபோது எல்லாம் "நான் என் குரு யதிராஜரின் பணிவிடையை முடித்து ஓய்வாக இருக்கும்போது என்னிடம் அவளை அழைத்து வா" என்று சொல்கிறான். ஆனால் இன்று வரையில் அவன் ஒரு நிமிஷமும் ஓய்வாக இருந்தது இல்லை. எப்போதும் ஏதாவது ஒரு பணியில் இருந்து வருகிறான்" என்று தன் ஆதங்கத்தை எடுத்துரைத்தாள்.

ஸ்ரீராமாநுஜருக்குத் தெரியும், கோவிந்தன் விஷய போகத்திற்கு இடம் அளிக்காதவர் என்று. அவரால் வைஷ்ணவம் புகழ்பெற நேரம் வந்துவிட்டது என்று நினைத்தார்.

இராமாநுஜர் கோவிந்தரை அருகில் அழைத்து "உன் தாய் மனவருத்தத்தை கேள்விப்பட்டேன். தமோ குணத்தை நீக்கிய பிறகு உன் மனைவியிடம் ஒரே படுக்கையில் படுத்துக் கொள்" என்றார்.

குருவின் உத்தரவை ஏற்றுக் கொண்ட கோவிந்தர் அன்றிரவு தன் மனைவியின் பக்கத்தில் படுத்துக் கொண்டார்! இரவு முழுவதும் தூங்கவில்லை! வேதாந்தப் பேச்சுகள் பேசியே இரவுமுழுவதையும்கழித்தார் என்றவிபரம் தன்மருமகள் வாயிலாக அறிந்த த்யுதிமதி அதை ஸ்ரீ இராமாநுஜரிடம் தெரிவித்தார். ஸ்ரீ இராமாநுஜர் மீண்டும் கோவிந்தரை அழைத்து "நான் உன்னை உன் இல்லற கடமையைக் காக்கச் சொன்னேன். நீ ஏன் அதன்படி நடந்து கொள்ளவில்லை' என்று கேள்விக் கணைகளைத் தொடுத்தார்.

"சுவாமி தமோ குணத்தை விலக்கிய பிறகு என் மனைவியுடன் ஒரே படுக்கையில் படுக்கும்படி தாங்கள் உத்தரவிட்டீர்கள். அப்படியே செய்தேன். தமோ குணம் நீங்கியதுமே உள்ளத்தில் உறையும் அந்தர்யாமியான பரமன் பிரகாசிக்கிறான். இத



ஸ்ரீவைகுண்ட நாதப்பெருமான் - கல்கத்தா.

வி. கி. கிருஷ்ணமாச்சாரி

னால் விஷய போகத்திற்கு பதிலாக வேதாந்த மனநிலையே மேலோங்கி இருந்தது" என்று அடக்கமாக பதில் அளித்தார்.

கீதாச்சாரியன் பகவத் கீதையில்...

"யே ஹி ஸம்ஸ்பர்சஜா போகா து:க
யோனய ஏவ தே
ஆத்யந்த வந்த: கௌந்தேய ந
தேஷு ரமதே புத:"

'இந்திரிய விஷயங்களில் தோன்றிய போகங்களே துன்பத்துக்கு ஏதுவானவைகளாம். அந்த ஆதியந்தமுடைய அவைகளிடம் ஞானி இன்புறுவதில்லை" என்று கூறியதற்கேற்ப கோவிந்தர் திகழ்ந்தார்.

கோவிந்தரின் பதில் இராமாநுஜருக்கு வியப்பையும், மிக்க சந்தோஷத்தையும் உண்டாக்கியது. புலன்களை வென்று துறவறத்திற்கு வேண்டிய எல்லா குணநலன்களும் இருப்பதால் அவரது தாயாரின் சம்மதம் பெற்று முறைப்படி சந்நியாசம் வழங்கினார். கோவிந்தருக்கு சங்குசக்ர அங்கனம், ஊர்த்துவ புண்ட்ரம், தாஸ்யநாமம், மந்த்ரோபதேசம், பஞ்ச சம்ஸ்காரத்தை செய்வித்து அவரிடம் திரிதண்டம் கமண்டலம் கொடுத்தார்.

சீடர்கள் இராமாநுஜரை எப்போதும் 'எம்பெருமானார்' என்று அழைத்து வந்தனர். பக்தியின் பிரதிபிம்பமாகவும், கூடுதலான ஞானமும் பெற்ற கோவிந்தருக்குத் தம் பெயரையே அளித்து "எம்பெருமானார்" என்று பெயர் சூட்டி மகிழ்ந்தார் இராமாநுஜர்.

இந்தப்பெயரை கேட்ட மாத்திரத்திலேயே ஸ்ரீ ராமாநுஜரின் பாதத்தில் விழுந்து தழுதழுத்தக் குரலில் "சுவாமி சிறியோனை மன்னித்தருள வேண்டும்" என்று தெரிவித்து தாஸ்ய பக்தியே வடிவான கோவிந்தர் இந்த பெயரை ஏற்றுக் கொள்ள மறுத்தார்.

குருவின் அமுதமான வாயில் இருந்து வந்த பெயரை அகற்ற முடியுமா!? எனவே இராமாநுஜர் எம்பெருமானார் என்ற பெயரின் முதல் எழுத்தையும் ஈற்றெழுத்தையும் கொண்டு சுருக்கி 'எம்பார்' என்று புதுப் பெயர் சூட்டினார்.

சந்நியாசம் என்பது வாழ்க்கையில் தோல்வி ஏற்பட்டவர்களுக்கு என்று தற்போதைய நிலை உருவாகி வருகிறது. இதுபற்றி சாஸ்த்திர நூல்களில் "சாஸ்த்திர நூல்களை கற்றுத் தேர்வதற்குரிய நிலை 'பிரம்மச்சரியம்', இல்லற தர்மத்தை அனுபவித்து உணர்ந்து வாழ்வதற்குரிய நிலை 'கிரகஸ்த்தம்', நாற்பத்தைந்து வயதுக்குப் பிறகு இல்லறத்திலிருந்து ஓய்வு பெற்று தனியாக இருந்து இறைவனை வழிபடும் நிலை 'வானப்பிரஸ்த்தம்', கடைசியில் முற்றும் துறந்து எல்லாவற்றையும் விட்டுவிட்டு இறை உணர்வு ஒன்றையே ஏற்று வாழும் நிலை 'சந்நியாசம்' என்று தெரிவிக்கிறது.

வாழ்க்கையில் யாதொரு குறிக்கோளும் இன்றி உண்பதும், உறங்குவதுமாக வாழ்க்கை நடத்துபவர்களாக இருந்து வருகிறோம். அடியாராக ஆகாவிட்டாலும் அடியார்களைப்போற்றிப்புகழும் குணநலனையாவது பெறுவோம். ஏனெனில் அடியார்தம் பெருமை அளவிடற்கரியது.



 

# சீர்காழி





சீர்காழி கோபுரம்

## சீர்காழி தல வரலாறு

சமயாச்சாரியார்களால் பாடல் பெற்ற 274 சிவத்தலங்களுள் சீர்காழி முதன்மையானது எனலாம்! ஏனெனில் திருமுறைகளில் முதல் திருப்பாடல் பிறந்த திருநகரம் சீர்காழி. காவிரியின் வடகரை தலங்களுள்சிறந்தது இது. சீர்காழியானது பிரமபுரம், வேணுபுரம், புகலி, வெங்குரு, தோணிபுரம், புறவம், சண்பை, கொச்சைவம் கழுமலம், சிரபுரம் என்ற பல பெயர்களை உடையது. புராண இலக்கியங்களில் கூறப்படும் மூலாதார க்ஷேத்திரபுரம், உய்காசி முதலிய திருப்பெயர்களையும் கொண்டது.

---

திரு. என். இராமகிருஷ்ணா
மயிலாடுதுறை.

---

குரு, லிங்க, சங்கமம் என்ற மூன்று திருமேனியோடும் இறைவன் எழுந்தருளியிருக்கப் பெற்ற தலம். பைரவ க்ஷேத்திரம். குமரவேளும், காளியும், பிரமனும் பூஜித்ததலம். சமயாச்சாரியார்களுள் திருஞான சம்பந்தப்பெருமான் அவதரித்த பெருமை இத்தலத்தின் தனிச்சிறப்பாகும். திருஞான சம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர், மாணிக்கவாசக சுவாமிகள் மற்றும் பல பெரியோர்கள் இயற்றிய தோத்திர பாமாலைகளை உடையது.

## மூர்த்திகள்

பிரம்மபுரீசர், திருநிலை நாயகி. இவர்களை பிரமன் பூஜித்து, பிரமன் சிவஞானம் கைவரப் பெற்றான். சாபங்கள் நீங்கப்பெற்றான். பெரியநாயகர் பெரியநாயகி பேருழிக் காலத்து மிதந்த பிரணவத் தோணியில் வீற்றிருந்தருளியவர். சிவஞானத்து இன்னமுதத்துடன் "திருமுலைப்பால"ளித்த செல்வரும் இவரே.

சட்டைநாதர்: சங்கம மூர்த்தம். தேவர்களின் தோலைச் சட்டையாக உடுத்தியதால் இப்பெயர் ஏற்பட்டது. இவருக்கு வெள்ளிக்கிழமை அர்த்தயாமத்தில் "புனுகுக் காப்பு" சாத்தப் பெறும். இவருக்குத் தண்டபாணி, சட்டைநாதர், வடுகநாதர், ஆபதோத்தாரணர் என்ற பெயர்கள் வழங்குகின்றன.

திருஞானசம்பந்தர்: சமயாச்சாரிய பெருந்தகையர்களுள் முதல்வராகிய ஞானசம்பந்த பெருமான் அவதரித்த



பிரம்மதீர்த்தம் அம்மன் கோயில்



தோணியப்பர் சட்டநாதர் கோயில்

தலமாதலின் இவருக்கு இங்கே தனிச் சிறப்பு உண்டு. இருவினைத்தீர்க்கும் கந்தபெருமானைப் போல் இத்தலத்தில் இவர் விளங்கி வருவதை அன்பர்கள் வழிபட்டு அனுபவித்து வருகின்றார்கள்.

பிரம்மதீர்த்தம் :- இதன் கரையில் தான் திருஞானசம்பந்த பெருமான் திருமுலைப்பால் உண்டது. கழுமல நதி, காளிதீர்த்தம் முதலான 22 தீர்த்தங்கள் இதில் இருக்கின்றன எனப் புராணம் கூறுகின்றது.

சித்திரை மாதம் தோறும் நிகழும் பிரம்மோத்சவத்தில் இரண்டாம் நாள் திருஞானசம்பந்த பெருமானுக்கு அருளமுதம் கொடுக்கும் சிறப்பு நண்பகல் 12 மணி அளவில் நடைபெறும். "திருமுலைப்பால் உண்டார் மறு முலைப்பால் உண்ணார்" என்னும் கூற்று இவ்விழாவின் சிறப்பை உணர்த்துகின்றது.

மலைமீது செல்வோம்: பெரிய நாயகியுடன்பெரியநாயகராகதோணியப்பர் உள்ளார். மூலவராக விளங்குபவர் பிரம்மபுரீஸ்வரர். இந்த லிங்கம் பிரம்மாவினால் ஸ்தாபிக்கப்பட்டது என்று புராணம் கூறும். மலைஉச்சியில் சட்டைநாதர் விளங்குகின்றார்.



முத்து சட்டை நாதர்

சீர்காழி கோவிலில் விசேஷமாக "அஷ்ட பைரவர்கள்" அமைந்துள்ளார்கள். அம்மையாரின் பெயர் ஸ்திர சுந்தரி திருநிலை நாயகி. இத்தலத்தில் முக்கியமான பிரம்ம தீர்த்தம் அம்மன் கோயில் முன்னால் உள்ளது.

பெருமை வாய்ந்த இத்தலத்தின் ஸ்தல விருட்சம் "பாரிஜாதம்" "கழுமலவள நகர் கண்டு கொண்டேன்" என்று சுந்தரர் பாடியுள்ளார்.

"நாலைந்து புள்ளினங்கள் ஏந்தின தென்பர்" என்று அப்பர், சுவாமிகளை பாடியுள்ளார். ஊழிக்காலத்தில் மேலே எழும்பிய சிறு மலையின் சிகரத்தை இறைவன் அருளால் இருபது பறவைகள் இங்குக்கொண்டு வந்தன. அரசன் இதற்குக் கட்டுமலை கட்டுவித்தான். அதனால் அவனுக்குப் பிள்ளைப்பேறு ஏற்பட்டது. உரோமச முனிவருக்கு இங்குக் கயிலைக் காட்சி காட்டப்பட்டது.

திருஞானசம்பந்தர் உத்சவமூர்த்தி அழகான படிமம். இதனை தரிசிப்போருக்கு பால் பிரசாதம் அளிக்கப்படுகின்றது. திருஞான சம்பந்தருக்கு அம்பிகை ஞானப்பால் ஊட்டிய வரலாறு எல்லோரும் அறிந்ததே. அந்நாளே "திருமுலைப் பால்" விழாவாகக் கொண்டாடப்படுகின்றது.

அவ்வமயம் தருமை ஆதீனம் மகா சந்நிதானம் ஓதுவார்மூர்த்திகளுள் ஒருவருக்கு "திருமுறைக் கலாநிதி" என்ற பட்டம் வழங்குவார்கள்.

திருஞானசம்பந்தர் பாடிய முதல் தேவாரப்பாடல் "தோடுடைய செவியன்". சைவம் தழைக்க இப்பாடல் அடிகோலிட்டது. ஞான சம்பந்தர் திருஉருவம் சிவிகையில் எழுந்தருளச் செய்யப்பட்டு பிரம்ம தீர்த்த கரைக்கு வர, அம்பாள் இறைவன் ரிஷப வாகனத்தில் எழுந்தருள திருமுலைப்பால் விழா நடைபெறும். பொற்கிண்ணத்திலுள்ள பாலினை ஞானசம்பந்தர் சிவிகைக்கு மகாசந்நிதானம்மாற்றுவார்கள். இந்தத்தங்கக் கிண்ணம் திருபனந்தாள் காசிமடத்து உபயம்.



திருஞானசம்பந்தர் உத்சவர்

திருஞான சம்பந்தர் கோவில், சுவாமி அம்மன் கோவில்களுக்கு நடுவில் அமைந்துள்ளது.

இக்கோவிலில் பலி பீடத்திற்கு தான் நிவேதனம் எல்லாம். அங்கிருந்து இறைவனைத் தரிசிக்கலாம். சட்டைநாதர் சிறப்பான தெய்வம். இங்கு பிரம்மோத்சவத்தில் சட்டைநாதர் புறப்பாடு, வலம்புரி மண்டபத்திலிருந்து அந்தணர்களால் செய்யப்படுகிறது.

இக்கோவிலில் பல கல்வெட்டுகள் உள்ளன. கி.பி. 1055 முதல் கி.பி. 1613 வரை பல மன்னர்கள் மானியம் வழங்கியுள்ளார்கள். 47 கல்வெட்டுகள் உள்ளன. வேணுபுரம் என்பதால் சமீபத்தில் மகா சந்நிதானம் அவர்கள் ஒரு சிறு மூங்கிற் புதரினைப் பயிர் செய்துள்ளார்கள்.



புள்ளினம்



திருமுலைப்பால் விழா



சிவிகையில் சம்பந்தர் புறப்பாடு

# வடமலை வள்ளல்

முன்னை வினையெல்லாம் தீர்த்து முத்தான வாழ்வு தரும் திருப்பதி திருவேங்கடமென 'நான்முகன் திருவந்தாதி'யில் திருமங்கை அருளிச்செய்துள்ளார்கள்.

"வேங்கடமே விண்ணோர் தொழு
வதும் மெய்மையால்
வேங்கடமே மெய்வினை நோய்
தீர்ப்பதுவும் வேங்கடமே
..............................
வானவரை காப்பான் மலை"

வினை போயிற்று, இனி வீடாகிய நற்பேறு பெற ஒரே வழி அவன் பாதமாகிய கால் வலையில் ஆத்மா சிக்கி விடவேண்டுமென "திருமழிசையார்" செப்புகின்றார்.

"வெற்பென்று வேங்கடம் பாடினேன்
வீடாக்கி
நிற்கின்றேன் நின்று நினைக்
கின்றேன் கற்கின்ற
நூல்வலையில் பட்டிருந்த நூலாட்டி
கேள்வனார்
கால் வலையில் பட்டிருந்தேன்
காண்"

சரி அவன் பாதசரணம் அடைந்தால் வலையில் சிக்கிக்கொள்ளலாம். அப்பாதம் எங்குள்ளது எனில் அவரவர் உள்ளத்திலே உள்ளது என்கிறார் "பேயாழ்வார்".

"இறையாய் நிலனாகி எண்டிசையும்
தானாய்
மறையாய் மறைப்பொருளாய்
வானாய் பிறை வாய்ந்த
வெள்ளத்தருவி விளங் கொலி நீர்
வேங்கடத்தான்
உள்ளத்தினுள்ளே உளன்"

வேறு எங்கெங்கு திருமால் உள்ளாரென "பூதத்தாழ்வார்" புரிந்து புகலுகின்றார்.

"மனத்துள்ளான் வேங்கடத்தான்
மாக்கடலான் மற்றும்
நினைப்பரிய நீளரங்கத்துள்ளான்
எனைப் பலரும்
தேவாதி தேவனெனப் படுவான்
முன்னொருநாள்
மாவாய் பிளந்த மகன்"

"வேதியன்" என்றால் மேன்மையானவன், அறநூல்களில் சொல்லியபடி நடப்பவன், ஒழுக்கத்தின் உச்சியிலே உலக நலனுக்காக வாழ்பவன் என்பது பொருள். தில்லையில் தம்மையும் மூவாயிரவருள் ஒருவராக அம்பலத்தான் இருப்பர்போல, வேங்கடமுளானும் உலக நல்வாழ்விற்கு விளங்கும் வேதியனே என பெருமையான பெரிய திருமொழி சொல்லும்.

"வலம்புரி யாழியனை வரையார்
திரள் தோளன் றன்னை
புலம்புரி நூலவனைப் பொழில்
வேங்கட வேதியனை"

திரு. ஜி. தனபால், M.A.M.Ed.,
திருவண்ணாமலை.

அந்த வேதியன் என்ன வண்ணத்தில் உள்ளான். வான் கலந்த வண்ணனாக உள்ளான் பூதலத்திலென "பூதத்தார்" புகலுகிறார்.

"பெருகு மத வேழம் மாப்பிடிக்கு
முன்னின்று
இருகணிள மூங்கில் வாங்கி அங்கிருந்த



திருமலையில் உத்சவர் புறப்பாடு

தேன் கலந்து நீட்டும் திருவேங்கடம் கண்டீர்
வான் கலந்த வண்ணன் வரை ”

இன்று நாம் கண்ணால் காணும் திருவேங்கடமுடையான் “கருமை உடைய” உருவத்திருமேனியாக உள்ளான். (வாழ்வை) நம் ஒளியை செம்மையாக்க அவன் கொண்ட திருவுளமோ!

“திரு. இரா. கணபதி” எழுதிய “ஸ்வாமி” என்ற திருநூலில் 42-ம் பக்கத்தில் கீழ்கண்டபடி இறைவன் “வண்ணம்” பேசபப்படுகிறது.

“திருமால் யுகத்துக்கு ஒரு வர்ணமாக, க்ருதயுகத்தில் வெளுப்பாகவும், த்வாபரத்தில் செம்மஞ்சளாகவும், த்ரேதாயுகத்தில் பச்சையாகவும் கலியில் நீல நிறமாகவும் இருப்பதாக, சொல்வதுண்டு. எனவே அவர் “யுகமொரு வண்ணரே” என கூறுகின்றார்.

அழகிய இறைவனை குலசேகர பெருமான் படியாய், மீனாய், செடியாய், குருகாய், வழித்தடமாய் இருந்து அநுபவிக்க ஆசைப்படுகிறார். மீனாய், மீன் கண்ணனை இருந்து ரசிப்பது சுவையிலும் சுவை!

“ஆனாத செல்வத்தரம்பையர்கள் தற்சூழ
வானாளும் செல்வமும் மண்ணரசும் யான் வேண்டேன்
தேனார் பூஞ்சோலைத் திருவேங்கடச் சுனையில்
மீனாய்ப் பிறக்கும் விதியுடையேனா வேனே”

இன்னும் ஆழ்வாராதி பெருமக்கள் தம்மையே வேங்கடவன் தங்கும் மலையாய்ப் பாவித்து பாடுவது இனிமையிலும் இனிமை.

“திருமால் வைகுந்தம்மே
தண் திருவேங்கடமே யென
துடலே”

என்பர்.

சரி இந்த உடலுக்கும், உயிருக்கும் வரும் “இடரை” போக்க வழி எது? சரியான மருத்துவன் யார் ?யாரைத் தேடி, யாரிடம் கோரிக்கைவைப்பது?

“கணணார் கடல் சூழிலங்கைக் கிறைவன்றன்
திண்ணாகம் பிளக்கச் சரஞ்செல வுய்த்தாய்
விண்ணோர் தொழும் வேங்கடமா மலைமேய
அண்ணா அடியே னிடரைக் களையாயே”

பிறர் இடரைப் போக்குவதில் திருவேங்கடத்திறைவனுக்கு மாபாரதமும், இராமாயணமும், பல்வேறு இலக்கியங்களும் சான்றாய் உள்ளன. அவன் இயற்றிய திருவிளையாடல்கள் கோடியுண்டு! தசாவதாரம் கண்ட தயாளன் செய்த இரண்டு சம்பவங்களை இனிக் காண்போம் இங்கே.

பல ஆண்டுகளுக்கு முன்னால், இறைவனின் அணுக்கத் தொண்டராய் “அனந்தார்யர்” என்பவர் இருந்தார். “திருமாலைத்” திருத்தொண்டுக்காக ஒரு நந்தவனம் அமைக்க எண்ணினார் அனந்தார். நீர் தேவைக்கு அங்கு ஒரு “திருக்குளம்” எடுக்க முடிவெடுத்துத் தன் நிறைமாத கர்பவதியான மனைவியுடன் குளம் வெட்டத் தொடங்கினார். மண்வெட்டியால் இவர் தோண்ட, மண் வாரி, கூடை நிறை மண்ணை அப்புறப்படுத்தும் பணி செய்தாள் மனைவி. அடியார் படும் துன்பத்தைப் போக்க ஓடிவருகிறான் இறைவன், “பிரம்மச்சாரி” கோலத்தில். “அம்மா ஓய்வாக இருங்கள் நான் கூடை சுமக்கிறேன்” எனக்கூறியதோடு நில்லாமல் கூடையை வெடுக்கெனப் பிடுங்கி மண்ணை அப்புறப்படுத்தலானான். அந்த அம்மைக்கோ மகிழ்ச்சி! அனந்தார்யர் இதைப் பார்த்துவிட்டார். ‘இது குடும்ப சமேதராய் செய்யும்தொண்டு. என் மனைவி துன்பப்பட்டாலும், தொண்டு அவளே செய்வதே சரி’ என்று கூறி மண்ணை அப்புறப்படுத்துவதை நிறுத்த வேண்டினார். இறைவன் காதில் அது விழவேயில்லை. கூடையை நிரப்புவதும், அப்புறப்படுத்துவதும் தொடர்ந்தன. அனந்தார்யர் கோபத்தின் எல்லையைத் தொட்டார். கையிலுள்ள மண்வெட்டியின் நுனியால் பிரம்மச்சாரியின் முகத்தில் ஒரே அடி. பிரம்மச்சாரி ஓடி மறைந்துவிட்டார். பின்பு பணி முடித்து அன்று மாலை திருவேங்கடவனைக்காண அனந்தார்யர்செல்ல இறைவனின் “முகவாய்” திருபாகத் திருமேனியில் ரத்தபிரவாகம்! பிரமச்சாரிக்கு பட்ட அடி. வந்தவர் மூலிகைகள் வைத்து அப்புகிறார். அடிபட்ட இடம் துவாரம். என்ன அபச்சாரம். இதோ இறைவனே திருவாய் மலருகிறார். ‘தொண்டனே இன்று முதல் உன் அன்பின் திருக்காணிக்கையாக என் மேனியில் முகவாயில் பச்சை கற்பூரம் அப்பிட வேண்டும்’எனப்பணிக்கிறார். தாயின் மேலான தயையாய் அவ்வன்னைக்கு செய்த உபகாரம், அதனால் இன்று வரை திருச்சாந்து திருமுகத்தில். தாம்பால் கட்டுண்ட தயாளன்தானே! அவன். (ஒன்றல்ல இரண்டு தடவை) அவனை அடைய பொன்னும், பொருளும் தேவையில்லை. அன்பும்அறனும் தேவை. இவ்வுலகில்பல்வேறுநிலையில் பல்வேறு காரணங்களால், வினைப் பயனால் துன்பப்படும் ஏழைகள், இடர்ப்பட்டோர், ஊனமுற்றோர் ஆகியோர்க்குஉதவுதலும், கல்லாருக்குக் கற்பித்தலும், அனைவரிடத்தில் அன்பு காட்டுதலும், எல்லாகோயில்களிலும் தினம் விளக்கிட்டு ஒளி கூட்டுதலும் ஆகிய செயல்களை யார் செய்து வருகிறார்களோ அவர்கள் இல்லம் தேடி தாமரையாள் கைப்பற்றி தயாளன் திருவேங்கடத்து மணாளன் வருவதுநிச்சயம்! வாழி அவன் திருநாமம்!!



தொடர் கவிதை

# திருவேங்கட நூற்றந்தாதி

## நேரிசை வெண்பா

வெற்பை விரித்து விரிநீள் அரவத்தூதக்
கிற்பொடு சுற்றிக் கடையுங்கால்—பொற்பொடும்
ஆமையாய்த் தாங்கி அருளிய வேங்கடக்
கோமானை நெஞ்சகமே கொள்

கொள்வான் கொடுங்கூற்றின் கண்நான் விழுந்துபட்டால்
என்ளளவும் ஐயமிதில் இல்லையில்லை—உள்ளில்
உறையும் திருமலை ஓங்கினான் நாமம்
பறைசாற்ற லேவென் பணி

பணிலம் பவளவாய் பூண்டு பெருமா
அணிஎதிர் பார்த்தன் அருகில்—துணிவோடு
தேரமர்ந்து துன்பம் தவிர்த்த வேங்கடப்
பேரரு ளுக்குமுண்டோ பீடு?

பீடில்லாப் பெம்மான் பாற்கடலுள் பொன்மகள்
கூடிப்பயிலுஞ்சீர் கோவிந்தன்—தேடியென்றும்
வாங்கும் வினைகள்தாம் மாய்ந்திட சென்னியே
வேங்கட வண்ணனடி வீழ்

வீழ்ந்தாள் உயிரிழந்து வெஞ்சினத்தாள் மற்றெல்லார்
வீழ்ந்தனர் வேள்வியை வாட்டியோர்—வாழ்த்தினான்
வேள்விசெய் மாமுனி வேங்கடம் மன்னியிரும்
ஆள்வினை மாற்றும் அரி

அரிமா வருவாய் அடைந்தான் பெருங்கால்
விரித்தான் உருவை விரைவாய்—பிரித்திட்டான்
அந்தியில் பேருடல் ஆடகன் வேங்கடம்
வந்தபின் தீர்ந்தான் வயிர்

வயிர உடைவாள் மகவான் தலைவன்
எயிறிடை ஈரேழ் இகங்கள்—உயிர்கள்
அனைத்தையும் காட்டினான் ஆர்வேங் கடத்தான்
மனையாள்வான் மாநகராள் வான்

வானினை வான்தவழ் விண்மீனை மீன்களிடைக்
கனல் நிலவைக் குளிரினை—கானல்
பொழிகதிரைத் தோற்றுவித்தான் பொன்வேங்கடத்தில்
எழிலாய் அருள்வான் இசைந்து

இசைந்தாலும் இல்லையெனினும் ஈறாவான்
இசைமுகனைச் செய்திட்ட தேவன்—விசையாலுள்
துள்ளித் துவளும் தருணம் தரணியினை
அள்ளும் மலையன் அருள்

அருள்வான் அணைவான் அருள்வதிற்கார்வான்போல்
இருள்வான் இணையான் இறையோன்—பொருளிற்
புகுவான் புகுந்து பொலிவான் மலையோன்
அகமுள் அடையும் அவன்

அவனை அறிவாய் அடிமைசெய் நெஞ்சே
தவத்தோர் தரணியோர் தேவர்—உவக்க
துயில்போல் நிரையெலாம் தம்மை மயர்க்க
குயிலாய் இசைத்தான் குழல்

குழலிசை ஊதுமென் காலுண்ட வேய்கள்
கழலொலி செய்யுமலைக் காடு — அழகில்
அலைநீர் கிடக்கும் அரங்கனை யொத்த
மலையே மலையன் வடிவு

வடிவக் குலமகள் வஞ்சகர் வேய்ந்த
பிடியிற் புலம்பிய போழ்து — கடிதினிற்
பெய்தான் துகில்மழை பூவண்ண னைப்போற்றி
உய்யும் வகையை உணர்

உணர்வில் அடியார்கள் ஒன்றிதம் உள்ளிற்
புணருங்கால் பேரின்பம் பூப்பான் — துணையில்லை
நாடவே றென்றிருப்போர் நீள்துயர் ஓட்டிட
ஊடுவரும் வேங்கட ஊற்று

ஊற்றாவான் அண்டியோர்க்கு ஊழியில் ஈற்றாவான்
நேற்றாவான் இன்றாவான் நாளையாவான்-போற்றுவோர்
வாட்டும் வினைக்கெல்லாம் மாற்றாவான் மாவருள்
கூட்டும் கருணைக் கடல்

கடலினிற் வேதத்தைக் காதகன் சென்றே
இடமென வங்கே இடுக்க — உடலினில்
மீனுருப் போந்தவை மீட்டவெம் மாயனோர்
கோனாய் இனிப்பான் கொழித்து

(தொடரும்)

திரு. வி. ஆர். ஸ்ரீநிவாஸ இராகவன், M.SC.,
சென்னை-44.

# நவராத்திரியில் சக்தி வழிபாடு

உலகில் எங்கும் இயங்க அல்லது எதையும் இயக்க சக்தி இன்றியமையாதது. தள்ளாத வயோதிகனுக்கு நடக்கச் சக்தி இல்லை. குருடனுக்குப் பார்க்கச் சக்தி இல்லை. செவிடனுக்குக் கேட்கச் சக்தி இல்லை. ஊமைக்கு பேசச் சக்தி இல்லை. மின் சக்தி இல்லையெனில் இரவில் நாடு, நகரம், பட்டி தொட்டி எல்லாம் இருள்மயமாகக் காட்சியளிக்கின்றன. பணவீக்கக் காலத்தில் பணத்தின் வாங்கும் சக்தி குன்றி விடுகிறது. அணுசக்தியைக் கொண்டு ஆக்கவும் செய்யலாம், அழிக்கவும் செய்யலாம். ஆண்டவனை அடைய ஆன்மீக சக்தி தேவைப்படுகிறது. இதைத் தான் மகாகவி பாரதியார்,

" வாழ்வு பெருக்கும் மதியே சக்தி
மாநிலங்காக்கும் வலியே சக்தி
தாழ்வு தடுக்கும் சதிரே சக்தி
சஞ்சலம் நீக்குந் தவமே சக்தி
விழ்வு தடுக்கும் விறலே சக்தி
விண்ணை யளிக்கும் விரிவே சக்தி
ஊழ்வினை நீக்கும் உயர்வே சக்தி
உள்ளத் தொளிரும் விளக்கே சக்தி "

என்றெல்லாம் குறிப்பிடுகிறார்.

இந்து மதத்தில் அறுவகைச் சமயங்கள் பேசப்படுகின்றன. 'அறுவகைச் சமயம் வைத்தாய்' என்பது அப்பர் திருவாக்கு. 'அறுசமய நீதியொன்றும் அறியாமல்' என்று அருணகிரிநாதர் அருளிச் செய்து உள்ளார். அறு சமயங்களில் சக்தியை முழு முதற் கடவுளாகவும், சக்தியினின்றே எல்லாம் தோன்றியதாகவும் கொள்வது சாக்தம் எனப்படும். எல்லாம் வல்ல மகா சக்தியின் சத்வ ராஜஸ தாமஸ குணங்களின்றும் முறையே சரஸ்வதி லட்சுமி மற்றும் மகாகாளி தோன்றியதாக மார்க்கண்டேய புராணத்தில் தேவி மகாத்மியத்தில் கூறப்பட்டு உள்ளதாக திரு. கோபிநாதராவ் தனது "இந்து சமயக் கடவுள் வடிவங்களில் அடிப்படைகள்" என்ற நூலில் குறிப்பிட்டுள்ளார்.


திருமதி. க. தேவகிபிரகாசம்,
*திருப்பதி.*


சாக்தர்கள் மட்டுமின்றி சைவர்களும், வைணவர்களும் இறைவியை மலைமகளாகவும் அலைமகளாகவும் வணங்குகின்றனர். ஆனால் சைவத்திலும், வைணவத்திலும் சிவனோ (அ) திருமாலோதான் முழு முதற் பொருளாகக் கொள்ளப்படுகிறது.

தமிழகத்தில் நிலம் மருதம், முல்லை, நெய்தல், குறிஞ்சி என நால்வகையால் வகுக்கப்பட்டது. இவை தம் நிலையிற் திரிந்தால் பாலை எனப்படும். பாலை நிலத்திற்குஅதிதேவதை கொற்றவையாம். சங்க இலக்கியமான திருமுருகாற்றுப் படையில், "வெற்றிவேல் போர் கொற்றவை" என்றும், "இழையணி சிறப்பிற் பழையோள்" என்றும் பேசப்படுகிறாள். மேலும் கோவலனும் கண்ணகியும் மதுரை செல்லும் பெருவழியில் ஐயையின் கோட்டத்தை அடைந்ததாகச் சிலப்பதிகாரத்தில் உள்ளது. கொற்றவையின் கோயிலில் அவர்கள் தங்கி இருந்த போது வேட்டுவர்கள் கொற்றவைக்கு வழிபாடு நடத்தினர்.



ஸ்ரீ அஷ்டதசபுஜ மகாலக்ஷ்மி துர்க்கா
என். ராமகிருஷ்ணன் - மாயூரம்

" இரண்டு வேறுருவில் திரண்ட
தோள் அவுணன்
தலைமிசைநின்ற தையல் பலர்
தொழும்
அமரிகுமரி கவுரி சமரி
சூலி நீலி மாணவற் கிளங்கிளை
ஐயை செய்யவள் வெய்யவள்
பாய்கலைப் பாவை பைந்தொடிப்
பாவை
ஆய்கலைப் பாவை அருங்கலப்பாவை''

என்றெல்லாம் போற்றப்படுகிறாள். மேலும் வீரத்தின் உருவமாம் கொற்றவைக்குப் பலி கொடுக்கும் பழக்கம் இருந்தமைக்கு இலக்கியச் சான்றுகளும், பிறவும் உள்ளன. இவற்றினின்றும் தமிழகத்தில் சக்தி வழிபாடு தொன்று தொட்டு இருந்தமை தெரிகிறது.

பொதுவாக நான்கு கைகளுடனும் மூன்று கண்களுடனும் சாந்தம் தவழும் முகத்துடனும் இறைவியை வடிக்க வேண்டுமாம். தலையில் மகுடமும், ஏனைய அணிகலன்களும் அணிந்து, பட்டாடை உடுத்தி இருக்கவேண்டும். பின் இரு கைகளில் பாசமும் அங்குசமும் இருக்க, முன் இரு கைகள் வரதம் மற்றும் அபய முத்திரைகளில் இருக்க வேண்டும். தன் நாயகனுக்கு அருகாமையில் இறைவியை அமைப்பதாயின், இரு கைகளும், இரு கண்களும்தான் இருக்க வேண்டும். ஒரு கை கடக முத்திரையில் (பூ ஏந்த நண்டு வடிவில் இருப்பது) மற்றொரு கை சத்திய வலம்பித முத்திரையில் (தொங்கிய நிலை) இருக்கும். இவ்வாறு இறைவியை சிலா வடிவத்தில் வடிக்கவேண்டும் எனச் சிற்ப சாத்திரங்கள் கூறுகின்றன.

இறைவியை வணங்க ஏற்படுத்தப் பட்ட ஆலயங்களில் காஞ்சிபுரம் காமாட்சியம்மன் கோயில், மதுரை மீனாட்சியம்மன் கோயில், மகாபலிபுரம் திரௌபதி இரதம் ஆகியவை பழமையானவையாம். இவற்றைத் தவிர கங்கையும் கடாரமும்கொண்ட முதல் இராஜேந்திர சோழன் காலத்திற்கு முன் அமைக்கப்பெற்ற ஆலயங்களில் இறைவிக்கென்று தனிச் சந்நிதி கிடையாது. இறைவனது சந்நிதியில் போகேசுவரி என்று இறைவியின் செப்புச் சிலைதான் இருக்கும். முதல் இராஜேந்திர சோழன் காலத்தில்தான் முதன்முதலாக திருக்காமக் கோட்டம் என்று இறைவிக்குத் தனியாகச் சந்நிதி அமைக்கப்பெறுவதாயிற்று. இருப்பினும் முதற் குலோத்துங்க சோழன் காலத்தில் இருந்துதான் இறைவிக்கென்று தனியாக ஆலயம் கட்டிட அமைப்பில் இடம் பெற்றது.



ஸ்ரீராஜராஜேஸ்வரி - திருப்பதி
எஸ். விநாயகம் - திருப்பதி

கல்விக் கடவுளாகிய கலைமகள் நான்முகன் நாவில் உறைவதாகக் கருதப்படுகிறது. "அஞ்சத்துவச முயர்த்தோன் செந்நா" அவளுறைவிடங்களில் ஒன்று என்பது குமரகுருபரசுவாமிகளின் திருவாக்கு.

" வடநூற்கடலும்
தேக்குஞ் செழுந்தமிழ் செல்வமும்
தொண்டர் செந்நாவினின்று
காக்கும் கருணைக் கடல் ''

அவள். மேலும்

" சொல்விற் பன்னமும் அவதானமுங்
கல்வி சொல்லவல்ல
நல்வித்தையும் '

தருபவள் அவள்.

" நாவிற் சரசுவதி நற்றுணையாக
காரார் குழலாள் கலைமகள் நன்குறய்
என் நாவிருக்க யானுனைப்பாட "

என்பது கந்த சஷ்டிக் கவசம். ஒருவன் கசடறக்கற்று உணர்ந்தவனா (அ) கல்லா மூடனா என்பதை அவனது வாக்கு தெளிவாகக் காட்டி விடும். எனவே கலைமகள் நாவிற் குடி கொள்பவளாகக் கருதுவது பொருத்தமாகவே உள்ளது.

திருமகள் திருமாலின் மார்பில் உறைவதாகக் கொள்ளப்படுகிறது. "திருமாது வாழ்வாட்டமில் வனமாலை மார்பன்" எனப் பரவுகிறார் குலசேகர பெருமான். மங்கை மன்

னனோ "திருவாழ் மார்பன் தன்னை" எனப் போற்றுகிறார். "திருவிடமே மார்பன் அயனிடமே கொப்பூழ்" என்பது நம்மாழ்வார் திருவாக்கு. ஒருவன் செல்வத்தை அடையும் போது, அவன் மனம் மகிழ்ச்சியால் துள்ளி விளையாடுகிறது. அதே போன்று அவன் செல்வத்தை இழந்த காலத்து, அவனது மனம் கடல் அலையெனச் சஞ்சலமடைகிறது. எனவே செல்வத்திற்கு அதிதேவதையான செய்யாளை திருமால் மார்பகத்துக் கொண்டது வியப்பன்றே.

"மலையின் மாதினை மதித்தங்கோர் பால் கொண்ட மனதியை" என்று சுந்தரர் பரவினார். "மையரி கண்ணியாளும் மாலுமோர் பாகமாகி" என அப்பர் போற்றி இசைக்கிறார். "மின் திரண்டன்ன நுண்ணிடை அரிவை மெல்லியாளையோர் பாகமாகப் பேணி" என்பது ஞான சம்பந்தர் திருவாக்கு. இவ்வாறு சிவபெருமானின் ஒரு பாதியாக மலைமகள் விளங்குவதாகக் கருதப்படுகிறது. "ஆண்மை நிறைந்த நிறைவே சக்தி" என்று பாரதியார் கூறியுள்ளவாறு வீரத்தைக் கொற்றவையாகப் போற்றினர்.

" ஒளிறுவாள் அருஞ்சமம் முருக்கிக்
களிறு எறிந்து பெயர்தல்
காளைக்குக்கடனே "

என்று அஞ்சாது போர் புரிதலே காளையின் கடமையெனக் கருதப்பட்டது.

" சிதைந்து வேறாகிய
படுமகன் கிடக்கை காணூஉ
ஈன்ற ஞான்றினும் பெரிதுவந்தனளே

என்பது தாயின் வீரத்தைத் தெளிவாகக் காட்டுகிறது. போரிலே ஒருவன் புறங்கொடுத்தான் எனக்கேட்ட அவனது தாய் "அங்ஙனமாயின் அவன் உண்ட முலையினை அறுத்திடுவேன்" என சூளுரை செய்கிறாள் எனில் வீரம் எவ்வாறு போற்றப்பட்டது என்பது புலனாகும். வீரத்தின் அதிதேவதையான மலைமகளை சிவபெருமானின் ஒரு பாகமாகக் கருதுவது வீரத்திற்கு அளிக்கப்பட்ட முக்கியத்துவத்தைக் காட்டுகிறது.

ஸ்ரீ பெத்தாச்சியம்மன் - அம்பகரத்தூர்

சக்தி வழிபாட்டிற்குரிய முக்கியமான விழா நவராத்திரியாகும். முதல் 3 நாட்கள் வெற்றியை நல்கும் மலைகளுக்கும், இடையில் உள்ள மூன்று நாட்கள் செல்வத்தை யளிக்கும் திருமகளுக்கும், கடைசி மூன்று நாட்கள் கல்வியைக் கொடுக்கும் கலைமகளுக்கும் உரியனவாகக் கொண்டு வழிபடுவர். எல்லா நாட்களிலும் நோன்பு நோற்று வழிபட இயலாதவர்கள், கடைசி நாளன்று எல்லாக்கலைகளுக்கும் தலைவியாம் சகல கலாவல்லி எனப்பெறும் சரஸ்வதியை வணங்குவர். எனவே, அந்நாள் சரசுவதி பூசை செய்யும் நாளாகக் கொள்ளப்படுகிறது.

எண்களில் 9 தனிச் சிறப்புடையதாகும். 9 உடன் எதைக் கூட்டினாலும், கூட்டிய அந்த எண்தான் வரும். சான்றாக, 9 உடன் 3 ஐக் கூட்டினால், 12 அதன் கூட்டுத்தொகை 3. 9 ஐ எத்தனை முறை பெருக்கிக் காட்டினாலும் 9 தான் விடையாகக் கிடைக்கும். சான்றாக 9 ஐ 7 ஆல் பெருக்கினால் 63. அதன் கூட்டுத் தொகை 9. எல்லா வற்றையும் 9 வகையாகப் பிரித்தனர். நவகிரகங்கள், நவரத்தினங்கள்' நவ தானியங்கள், நவ பாசாணங்கள், நவரசங்கள் ஆகியவை யாம். இறைவனை வாழ்த்தும் மந்திரங்களான அட்டோத்திரம் 108 கொண்டது. அதாவது 9. சகஸ்ரநாமம் 1008. அதாவது 9. சக்தியை பெருக்கும் 9 சக்தியை போற்றும் ராத்திரியாக அல்லது நவராத்திரியாகக்கொண்டாடுவதுசாலப் பொருத்தமே.



# குத்து விளக்கின் மகிமை !

ஆலயத்திற்கு செல்ல விருப்பம்இருந்தும், சூழ்நிலை, உடல்நிலை சமய சந்தர்ப்பங்கள் இடம் தராத பட்சத்தில் அதற்காக மனம் வருத்தப்படவேண்டாம். வீட்டிலேயே குத்துவிளக்கை ஒன்று அல்லது ஐந்து முகமாக ஏற்றி வைத்து, பொதுவாக மூன்று முறை வலம் வந்து வணங்கினால் ஆலயத்திற்கு சென்று வந்த பலனைப் பெறலாம். குத்து விளக்கை வலம் வரும் பொழுது அஷ்டாக்ஷர மந்திரத்தை மனதில் ஜபித்து வருதல் வேண்டும்.

கூறியவர் : திரு. ராமானுஜம் அவர்கள், காட்டூர்.

தகவல் : திருமதி. கமலவேணி தனபதி, திருச்சி.

## பக்தி வலையில் அகப்படுவான்

இலையிற் கிடந்தவன் பின்னாளில் உயர்திரு
மலையில் நிற்கின்றான் அலர்மேல் மங்கைமார்பன்
அலையிற் துயில்கின்றா னென்றாலும் மிகுபக்தி
வலையிற் படுவான் பரமன்திரு மகளுடனே.

## நைஷ்டிக பிரம்மச்சாரி யார்?

பிரம்மச்சாரி இரு வகைப்படுவர்.

வாழ்நாள் முழுதும் விவாகம் செய்து கொள்ளாமல் பிரம்மச்சர்ய ஆச்ரமத்தில் இருப்பவர் நைஷ்டிகர்.

சிறிது காலம் பிரம்மச்சர்யத்தை அனுஷ்டித்து மணம் செய்து செய்து கொள்பவர் 'உபகுர்வாணர்' எனப்படுவர்.

—ஆதாரம்: காளிதாசரின் 'குமார ஸம்பவ காவ்யம்'

## ஒரு ராஜ்யத்தின் அங்கங்கள்

இராஜ்யத்திற்கு ஏழு அங்கங்கள் இருக்கும். அவை அரசன், மந்திரி, அரசனது நண்பர்கள், பொக்கிஷம், நாடு, அரண், சேனை ஆகியவை.

நெருப்பு, ஜலம், வியாதி, பஞ்சம், சாவு இவை தெய்வக் கோபத்தால் வரும் தீங்குகளாகும்.

ஜனங்களுக்குக் கஷ்டமளிப்பவர்கள்: திருடர்கள், சத்ருக்கள், அரசாங்க உத்தியோகஸ்தர் மற்றும் பேராசை பிடித்த அரசன் ஆகியோர்.

ஆதாரம்: ரகுவம்ஸ காவியம்.

தகவல்: க. இராமலிங்கம்-புதுப்பேட்டை.

(20-ம் பக்கத் தொடர்ச்சி)

வரி வளைக்கை வாளேந்தி மாமயிடற்
செற்றுக்
கரியதிரி கோட்டுக் கலைமிசைமேல்
நின்றாயால்
அரியரன்பூ மேலோன் அகமலர்
மன்னும்
விரிகதிரஞ் சோதி விளக்காகியே
நிற்பாய் '

திருமாலுக்குரிய சங்கினையும், சக்கரத்தையும் தாமரை மலர் போன்ற திருக்கைகளிலே ஏந்திக்கொண்டு, சிவந்த கண்களையுடைய சிங்கம் ஆகிய ஊர்தியின்மீது கங்காதரனும் நெற்றிக் கண்ணனும் ஆகிய சிவபெருமானின் இடப்பாகத்தில் அர்த்த நாரீசுவரியாகத் தேவி அருட்காட்சி வழங்கி அருள்கின்றாள்.

சங்கமும் சக்கரமுந் தாமரைக் கை
யேந்திச்
செங்கண் அரிமான் சினவிடைமேல்
நின்றாயால்
கங்கை முடிக்கணிந்த கண்ணுதலேன்
பாகத்து
மங்கை யுருவாய் மறையேத்தவே
நிற்பாய் !

—சிலப்பதிகாரம்.

முடிவுரை :

இவ்வாற்றானெல்லாம் தேவி வழிபாடு, தமிழகத்தில் மிகப் பழங்காலம் தொட்டே, ஏன் இந்தியா, உலகநாடுகளில் எல்லாம் சிறப்புற நிகழ்ந்து வந்தமை தெளியலாம்.

தனம் தரும்; கல்வி தரும், ஒரு
நாளும் தளர்வறியா
மனம் தரும்; தெய்வ வடிவம்
தரும்; நெஞ்சில் வஞ்சமில்லா
இனம் தரும்; நல்லன எல்லாம்
தரும்; அன்பர் என்பவர்க்கே
கனம் தரும்; பூங்குழலாள்
அபிராமி கடைக்கண்களே.

என அபிராமிபட்டர், தமது அபிராமி அந்தாதி என்னும் நூலில் பாடியருளியவாறுபோல, உலக அன்னையாகிய பராசக்தியைப் பரவி வழிபட்டால், நாம் எல்லாவகையான நலங்களையும் பெற்று உய்யலாம். ௐ

வனப்பும் வண்ணமும் மிக்க தீபாவளித் திருநாள் கொண்டாட்டத்தில் ஒளி விளக்குகள் ஏற்றி தீப வண்ணம் புரிவது ஒரு முக்கியஅம்சம். நாடெங்கும் தீபாவளித் திருநாள் பல்வேறு விதமாகக் கொண்டாடப்படினும், எல்லா இடத்திலும் தீபஜோதி வழிபாடு ஒரு பொது அம்சமாக விளங்குகிறது.

இருளை விரட்டி ஒளியைப் பொழியும் தீபஜோதியை மங்கலச் சின்னமாக — தெய்வ வடிவாக வழிபடும் மரபு பல சமயங்களிலும் இருக்கிறது. என்பதாலேயே அனைவருமே அந்த அருட்பெருஞ்சோதியை வழிபடுகிறோம்.

## தீப தத்துவம

பெருமை மிக்க வேத நூல்கள் சூரிய தேவனையும் அக்கினியையும் ஒளி தெய்வங்களாகக் குறிப்பிடுகின்றன. மகாகவிகாளிதாஸனின் "குமார சம்பவம்" தீப தத்துவத்தையும், ஆக்கினியின் பெருமைகளையும் சிறப்பித்துக் கூறுகிறது. உபநிஷதங்களும், புராண நூல்களும் ஜோதி மகிமை என்று போற்றிப் புகழ் பாடுகிறார்.

"நின்றென் உலகிடை உவாவு மிமிசை
நின்றுநின்று உயிர்தொறும்
நெடிது காக்குமே"

என்று கம்பர் பெருமான் ஒளி தேவனைப் பாடுகிறார்.

வேதங்கள் ஒளி தேவனைப் பற்றியும், ஜோதி மகிமையைப் பற்றியும் கூறும் அரிய கருத்துக்களைத் தமிழ் இலக்கியங்களிலும் பக்தி காவியங்களிலும் பரவலாகக் காண்கிறோம்.

# அடியார்கள் ஏற்றிய அருட் தீபம்

"சன்மிஷ்டை"

ஒளியை இறை அம்சமாக வணங்காதவர் இல்லை. சக்தியை ஒளி வடிவினள் என்று தேவி துதி போற்றுகிறது. திருமாலை "ஞானச் சுடராக"க் காண்கிறார் ஆழ்வார் ஒருவர்.

சிவபெருமானோ "அலகில் சோதியன்", "சோதிவானவன்","சோதியே துருவாதி" சோதியே சுடரே" என்றெல்லாம் துதிக்கப்பெற்ற அருட்பெருஞ்சோதியாவார். தாமரைக் கோயில் தலைவி திருமகளும் சோதி வடிவினள்தான்; திருவிளக்கிலே தீப லக்ஷ்மியாக வந்து உறையும் அவள், ஒளி வடிவினளே! ஒளி இல்லையெனில்உலகில்லை; உயிர்களில்லை; இரவுமில்லை; பகலுமில்லை.

பஞ்ச பூதங்களில் ஒன்றான ஒளி இல்லையெனில் ஐம்புலன்களில் ஒன்றான கண்களுக்குப் பொருளில்லை. ஜோதியை, உலகை இயக்கும் ஒளியை வழிபடுவது நம்முள் கவ்வியிருக்கும் அக இருளையும் போக்கவல்லதையைப் போற்றிக் குறிப்பிடுகின்றன. தமிழ் இலக்கிய நூல்கள் பலவற்றிலும் ஒளி வணக்கம் சிறப்பித்துக் கூறப்பட்டிருக்கின்றது.

ஒளி வழிபாட்டின் நாயகன் சூரிய தேவனே. தானே ஒளி மயமாகி உலகெலாம் ஒளி பொழிபவன் அவன். தமிழ்ப்பெருங்காப்பியம் சிலப்பதிகாரத்தில்,

"ஞாயிறு போற்றுதும்
ஞாயிறு போற்றுதும்"

என்று அருணாஞ்சலி செய்கிறார் ஆசிரியர் இளங்கோவடிகள்.

ஒளி பொழிந்து உலகைக்காக்கும் ஆதவனைத் தமிழ்ப் பெரும் புலவர் நக்கிரர்,

"உலகம் உவப்பவன் ஏர்பு இரிதரு
பலர் புகழ்
ஞாயிறு ஓவற இமைக்கும், சேண்
விளங்கு அவிரொளி"

## ஞான தீபம்

இருளின் நடுவே ஒரு சிறிய குத்து விளக்கைஏற்றி ஒளியைக்காண்கிறோமல்லவா. அப்பர் சுவாமிகள் ஒரு ஞான தீபம் ஏற்றுகிறார். ஒளி பிறக்கிறது; இருள் விலகுகிறது.

'உடம்பெனும் மனையகத்து
உள்ளமே தகளியாக
மடப்படும் உணர்நெய் அட்டி
உயிர் எனும் திரிமயக்கி
இடம்படு ஞானத்தீயா
எரிகொள இருந்து நோக்கில்
கடம்பா காளை தாதை
கழலடி காணலாமே"

என்பது அப்பர் காட்டும் தீப தரிசனம். அப்பர் ஏற்றிய அந்த ஞான தீபத்திலே - அருட்பெருஞ் சோதியைக் காணலாம். நம் உடலின் உயிரைத் திரியாக்கி உணர்வை நெய்யாக்கி அதில்வார்த்து அதில் உள்ளத்தைத் தூய சுடரொளியாக்கி ஞான தீபத்தை ஏற்றினால் இருளெல்லாம்

அகன்று — ஒளியை — இறைவனைக் காணலாம் என்பது அப்பர் பெருமான் திருவாக்கு.

## பொய்கையாழ்வார் காட்டும் ஒளி

இந்தப் பிரபஞ்சமே இறைவன் ஏற்றிய ஓர் "தீபம்" தானே? இப்படி ஓர் அற்புதத்தைப் புரிந்த இறைவனின் கருணையை எண்ணி எண்ணி மனமுருகிப் பூரிப்படைகின்றார் நம் பொய்கையாழ்வார். அவரது பூரிப்பிலே பிறக்கின்றது ஓர் அருட் பாசுரம்.

"வையந் தகளியா
வார்கடலே நெய்யாக
வெய்ய கதிரோன்
விளக்காக செய்ய
சுடராழி யானடிக்கே
சூட்டினேன் சொல்மாலை
இடராழி நீங்குவே என்று"

என்று பாடிப் பரவி நாரணனுக்குச் சொல்மாலை சூட்டுகிறார். அவர் மாலை மணக்கிறது; தமிழ் மணக்கிறது.

## பூதத்தாழ்வார் அனுபவம்

நெஞ்சத்து அன்புதான் தகளி; உள்ளத்தின் உண்மை ஆர்வம்தான் நெய்; இனிய சிந்தனையுடன் இப்படி ஓர் ஞானச் சுடர் விளக்கை ஏற்றுகிறார் பூதத்தாழ்வார்.

"அன்பே தகளியா
ஆர்வமே நெய்யாக
இன்புருகு சிந்தை
இடு திரியாநன்புருகி
ஞானச் சுடர்விளக்கு
ஏற்றினேன் நாரணற்கு
ஞானத் தமிழ் புரிந்தநான்"

பூதத்தாழ்வார் ஏற்றிய ஞானச்சுடர் விளக்கின் பேரொளி எந்த இருளையும் மாய்த்து அருளுக்கு வழிகாட்டும் ஆற்றலைக் கொண்டிருக்கின்றது.

## தீப ஒளியின் தேவி

தீபம் மங்கள வடிவம்; ஒளி பொழியும் போது அருட் கனிவையும் அழகையும் ஒருங்கே தீபத்தில் காணலாம். இந்த மங்கள வடிவைத் திருமகளின் எழில் வடிவாக உணர்ந்து, கண்டு வழிபடுவதில்தான் எத்தனை நிறைவு; மகிழ்ச்சி. தீபத்தில் திருமகளை அமர்த்தி — தீபலக்ஷ்மியாக வழிபடும் மரபு பன்னெடுங்காலமாகவே இருக்கிறது. அறிவு மயக்கமும் சோம்பலும் உள்ள இடத்தில் லக்ஷ்மி கடாட்சம் இராது என்பதை அறிவோம்.

தீய குணங்களின் சின்னம்தான் இருள். இந்த இருளைவிலக்கி இன்பம் நல்கும் ஒளியை, வாழ்வுதரும் லக்ஷ்மி தேவியாக வழிபடுவது பொருத்தம் தானே! தீபங்களில் பதினாறு வகையான வடிவங்களில் தீப லக்ஷ்மி உறைவதாகப் பண்டைய நூல்கள் கூறுகின்றன.

பதினாறு வகை தீப லக்ஷ்மி வடிவங்களுள், கரத்தில் ஒளி விளக்கை ஏந்தியவாறு நிற்கும் வடிவம் மிகச் சிறப்பான ஒரு அம்சம். இதுவே "பாவை விளக்கு" எனப்படுகிறது. வெண்கலத்திலான எழிலார்ந்த பாவை விளக்குகளை ஆலயங்களில் காணலாம். தீப லக்ஷ்மியின் தோற்றம் நிறைவான ஓர் அம்சமாகும்.

எழில் ததும்பும் முகம்; கவர்ச்சியான கண்கள்; அருட்புன்னகை; பொலிவான அணிகலன்கள்; கரங்களிலே அருட் ஜோதி விளக்கு இப்படி "ஒளி சேர் நலமனைத்தும் ஓங்கி வருகின்றன காண்" என்பது போன்று மங்கல வடிவமாகத் திகழ்பவள் தீப லக்ஷ்மி.

பௌத்தர்களும், ஜைனர்களும் கூட பரம்பொருளை ஞான ஒளி ரூபமாகக் கண்டு வழிபடுகின்றனர். ஒளி வணக்கம் எல்லா சமயத்தினருக்கும் பொதுவான ஓர் அம்சமாக விளங்குகிறது. தீப ஒளி தரிசனம் செய்வதை அனைவருமே சிறப்புடையதாகக் கருதுகின்றனர். தீபாவளித் திருநாளில் அடியார்கள் ஏற்றிய அருட்தீபத்தில் அக இருள் நீக்கி, அருள் வடிவினைக் கண்டு களிப் பெய்துவோமாக!

★

## எம்பெருமானை அடைய!

1) க்ரேதா யுகத்தில் — பகவத்யானம்–தபஸ்
2) த்ரேதா யுகத்தில் — யாக யக்ஞங்கள்
3) த்வாபர யுகத்தில் — அர்ச்சனை–பூஜித்தல், ஆதானம்
4) கலியுகத்தில் — நாம சங்கீர்த்தனம் செய்தல் சரணாகதி

## புராணங்கள் - 18

1) ஸாத்விக புராணங்கள் - 6

1. விஷ்ணுபுராணம் 2. நாரத புராணம் 3. கருடபுராணம்
4. பாத்மம் 5. ஸ்ரீ பாகவதம் 6. வராக புராணம்

2) தாமஸ புராணங்கள் - 6

1. மத்ஸ்ய புராணம் 2. கௌர்மம்
3. லிங்க புராணம் 4. சைவ புரா ம்
5. ஸ்காந்த புராணம் 6. ஆக்நேயம்

3) ராஜஸ புராணங்கள் - 6

1. ப்ரம்மாண்ட புராணம் 2. ப்ரம்ம வைவர்த்தகம்
3. மார்க்கண்டேயம் 4. பவிஷ்யத் புராணம்
5. வாமன புராணம் 6. ப்ராஹ்மம்

— அடியார்க்கடியவன், கேதாண்டபட்டி.

# பெண்மை வாழ்க!

இவ்வுலகில் மனிதஇனம் தழைத்தோங்கப் பல வழிகளிலும் உறுதுணையாக இருப்பவர்கள் பெண்கள் ஆவார்கள். குழந்தை பிறந்த உடன் அதன் வாயில் இருந்து வரும் முதல் சொல் 'அம்மா' என்பதே ஆகும். ஒரு பெண் மனைவியாகவும், தாயாகவும்,குடும்பத்தலைவியாகவும் இருந்து அவர் குடும்பத்துக்குச் செய்யும் பணிகளுக்கு ஈடாக எதையுமே கூறமுடியாது. நாம் வாழும் நாட்டைத் 'தாய்நாடு' என்றும், நாம் பேசும் மொழியைத் 'தாய்மொழி' என்றும் கூறுவதிலிருந்தே பெண்மையின் சிறப்பைப்பற்றி நன்கு அறிந்து கொள்ள முடியும். மனிதவாழ்க்கையின் உயிர் நாடி பெண்கள்தான் என்று கூறினால் அது மிகையாகாது.

அன்பு, அறம், ஆக்கம், வீரம் போன்ற உயர்ந்த பண்புகளின் உறைவிடமாகப் பெண்கள் திகழ்ந்திருக்கிறார்கள், திகழ்ந்து வருகிறார்கள். பெண்மை என்பது அழகின் மறுவடிவமாகும். பெண்கள் இல்லாத உலகம் பாலைவனத்திற்கு ஒப்பானதாகவே இருக்கும். உலகப் புகழ்பெற்ற அறிஞர்களும் கவிஞர்களும் பெண்மையைச்சிறப்பித்துப் போற்றி உள்ளார்கள். பெண்மையை-பெண் இனத்தை சிறுமைப் படுத்தியவர் எவரும் உலகம் புகழும் உயர்ந்த நிலைக்கு வரவில்லை; வரஇயலாது.

மனித வாழ்க்கைக்கு இன்றியமையாத கல்வி, செல்வம், வீரம் ஆகிய மூன்றையும் அருளவல்லவர்கள் முறையே கலைமகள், திருமகள், மலைமகள் ஆகிய பெண் தெய்வங்கள் ஆவார்கள். சிவபெருமான் பெண்மையின் அம்சமான சக்தியைத் தம் உடலின் ஒரு பகுதியாகக் கொண்டு விளங்குகிறார். திருமாலின் அடியார்களுக்குக் கருணை புரிந்து செல்வத்தை வழங்குபவர், அவரின் நாயகியான திருமகள் ஆவார். மானிடர்க்குக் கல்விச்செல்வத்தை வழங்கி அதன் மூலம் அவர்களைப் புகழ்பெற வைப்பவர் பிரம்மாவின் துணைவி கலைமகள் ஆவார். இப்படி தெய்வ நிலையிலும் பெண்மை சிறந்த நிலையில் திகழ்கிறது.

தமிழ்நாட்டில் சங்ககாலத்திற்கு முற்பட்ட காலத்திலேயே பெண்கள் போற்றத்தக்க நிலையில் இருந்திருக்கிறார்கள். தமிழ்க்கடவுள் என்று போற்றப்படும் முருகன் தமக்கு மாங்கனி கிடைக்கவில்லை என்ற காரணத்துக்காகத் தமது பெற்றோர்களாகிய சிவபெருமான் - பார்வதி ஆகியோர் மீது சினம்கொண்டபோது அவர் சினம் தணிய வைத்தவர் ஔவையார் என்ற பெண்பாற் புலவர் ஆவார். ஔவையார் இயற்றி உள்ள 'ஆத்திச்சூடி' 'கொன்றைவேந்தன்' ஆகியவை சிறந்த நீதி நூல்களாகும். காவற்பெண்டு என்ற சங்ககாலப் பெண் புலவர் பாடி உள்ள,

"சிற்றில் நல் தூண் பற்றி நின்மகன்
யாண்டு உளனோ?' எனவினவுதி
என்மகன்
யாண்டு உளன் ஆயினும் அறியேன்;
ஒரும்
புலி சேர்ந்து போகிய கல்அளைபோல
ஈன்ற வயிறு இதுவே
தோன்றுவன் மாதோ போர்க்களத்
தானே!" (புறம்-83)

என்ற புறநானூற்றுப் பாடல் அக்காலத்தில் பெண்களிடம் இருந்த வீரத்தைப் படம் பிடித்துக் காட்டுகிறது.

இறைவனுக்குப் பாமாலையோடு பூமாலை சூடிக்கொடுத்த ஆண்டாள் இறைவனையே கணவனாக அடைந்தவர். பன்னிரு ஆழ்வார்களில் ஒருவரான ஆண்டாள் என்ற பெண் மனித குலத்தை உய்விக்க அருளிய 'திருப்பாவை', 'நாச்சியார் திருமொழி' ஆகியவை திராவிட வேதம் என்று போற்றப்படும் நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்தில் இடம்பெற்றுத் தமிழ் இலக்கியத்துக்குப் பெருமை சேர்க்கின்றன. இவ்விதமே திலகவதியார், காரைக்கால் அம்மையார் போன்றவர்களும் மிக்க புகழ்பெற்று விளங்கியவர்கள் ஆவார்கள். கற்புக்கரசியான கண்ணகி பெண் குலத்தின் திருவிளக்காகச் சுடர் விட்டுப் பிரகாசிக்கிறார். இராமகிருஷ்ண பரமஹம்சரின் துணைவியாரான அன்னை சாரதாதேவியும் பெண் குலத்துக்குப் பெருமை சேர்த்துள்ளார்.

திரு. எஸ். இராஜாராமன்,
பி.எஸ்ஸி., பி.எல்.,
திண்டிவனம்

பெண்மையை மதித்து பெண் மக்களுக்கு உரிய மரியாதையை அளித்து அவர்களைக் காக்கவேண்டியது ஆண் மக்களின் கடமையாகும். இராமன் அரசைத் துறந்து பதினான்கு ஆண்டுகள் காட்டுக்குச் சென்று சொல்லொணா இன்னல்களுக்கு ஆளாகக் காரணமாயிருந்தவள் மந்தரை என்ற கூனி. இவள் பேச்சைக் கேட்டு கைகேயி இராமனைக் காட்டுக்கு அனுப்பினாள். இலக்குவனோடும் சீதையோடும் கானகம் சென்ற இராமன் பதினான்கு ஆண்டுகள் கழிந்த

பின் நாடு திரும்பியதும் தமது அன்னையை வணங்கி ஆசி பெற்றார். பின் கைகேயியையும் வணங்கினார். தமக்குக் கேடு செய்த பெண்களையும் வணங்கி அவர்களைப் பெருமைப் படுத்திய இராமன் மானிடர்க்கு முன் உதாரணமாகத் திகழ்கிறார்.

பெண்களின் வாழ்க்கை முறை பற்றியும் அவர்களின் கடமைகளைப் பற்றியும் ஆன்றோர்கள் விளக்கிக் கூறியுள்ளார்கள். மாட்சிமைத் தன்மை ஒரு குடும்பத் தலைவியிடம் இல்லை என்றால் அக்குடும்பம் பெருமை அடையாது என்பதைத் தெய்வப் புலவர் திருவள்ளுவர்,

“மனைமாட்சி இல்லாள்கண்
இல்லாயின் வாழ்க்கை
எனைமாட்சி தாயினும்இல்”

என்று கூறுகிறார். பெண்கள் சிறப்புற்று வாழ அவர்கள் வீரம், முறையான நல்லொழுக்கம், கல்வி அறிவு ஆகியவற்றைப் பெற வேண்டும் என்பதை வலியுறுத்தி மகாகவி பாரதியார்,

“நிமிர்ந்த நன்னடை நேர்கொண்ட
பார்வையும்
நிலத்தில் யார்க்கும்அஞ் சாத
நெறிகளும்
திமிர்ந்த ஞானச் செருக்கும்
இருப்பதால்
செம்மை மாதர் திறம்புவதில்லை
யாம்”

என்று அழகாகப் பாடி உள்ளார். பெண்கள் அழகின் அம்சமாக இருப்பது ஆண்கள் இன்பம் பெறுவதற்காக என்ற பொய்யான தத்துவத்தைத் தகர்த்து எறிந்து பெண்ணினத்தை ஆணினம் அடிமைப்படுத்தாமல் பார்த்துக்கொள்ள வேண்டியது புதுமைப் பெண்களின் தலையாய கடமை ஆகும். சமுதாயத்தில் பின் தங்கிய நிலையிலும் ஆதரவற்ற நிலையிலும் உள்ள பெண்களுக்குக் கைகொடுத்து உதவ வேண்டியது படித்த வசதி உள்ள பெண்களின் கடமை ஆகும். மேலும் பெண்கள் வீட்டுக்கும் நாட்டுக்கும் ஏன் உலகத்துக்கும் ஆற்ற வேண்டிய கடமைகள் மிகப்பல உள்ளன.

இக்காலத்தில் பெண்கள் சரிநிகர் சமானமாக எல்லாத் துறைகளிலும் புகழ் பெற்று விளங்குவதைக் காண்கிறோம். மருத்துவம், வங்கி, சட்டம், நீதித்துறை, காவல்துறை, கல்வி, கலை, இலக்கியம், அறிவியல், தொழில் நுட்பம், சமூகத் தொண்டு, வணிகம், அரசு, அரசியல் ஆகிய எல்லாத் துறைகளிலும் பெண்கள் சிறந்து விளங்குவது பற்றிப் பெருமைப் படலாம். ஆனால் பெண்களுக்குச் சமுதாயம் இழைக்கும் கொடுமைகள் குறையவில்லை என்பது வேதனை தரும் உண்மையாகும். பெண்களுக்கு இழைக்கப்படும் கொடுமைகளில் முதல் இடம் வகிப்பது வரதட்சணைக் கொடுமையாகும். கயமை குணம் கொண்டவர்கள் ஆண்களுக்கு எவ்விதத்திலும் குறையாத பெண்களைக் கீழ்த்தரமாக நடத்துகிறார்கள். இது கண்டிக்கத்தக்கதாகும். பெண்மையைக் கேவலப் படுத்தி எடுக்கப்படும் திரைப்படங்களும் அப்படங்களை விளம்பரப் படுத்தும் திரைப்படச் சுவரொட்டிகளும், பெண்களின் அழகைக் கவர்ச்சியாக ஆபாசமாக கதைகளிலும் படங்களிலும் சித்தரித்து வெளியிடும் பத்திரிகைகளும் பெண் நலத்துக்கு எதிரானவையாகும். இவற்றில் ஈடுபடுபவர்கள் பெண்களுக்கு எதிராகச் செய்யப்படும் குற்றங்களைச் செய்பவர்களுக்கு உடந்தையாக இருக்கிறார்கள். வன்முறை, கொலை, கொள்ளை, கற்பழிப்பு, மனைவியைக் கைவிடுதல், விபச்சாரம் போன்ற கொடுமைகள் சமுதாயத்தில் அழிந்தொழியாமல் தலைவிரித்தாடுவதற்கு இப்படிப்பட்டக் கயவர்களே காரணமாவார்கள். இக்கொடுமைகள் புரியும் கெடுமதியாளர்களுக்கு எதிராகப் போராடி பெண்ணின் பெருமையை இம்மண்ணில் நிலை நிறுத்தவேண்டியது பெண்களின் கடமை மட்டும் அல்ல, அது வீரம் மிக்க ஆண்களின் பொறுப்பும் ஆகும். இவ்விதம் செய்வதன் மூலமே சமுதாயம் சீரழிவதினின்றும் தடுக்கமுடியும். பெண் விடுதலைக்கு முழக்கமிட்ட பாரதியார்,

‘பெண் அறத்தினை ஆண்மகன்
வீரந்தான்
பேணு மாயின் பிறகொரு
தாழ்வில்லை
கண்ணைக் காக்கும் இரண்டிமை
போலவே
காதல் இன்பத்தைக் காத்திடு-
வோமடா!

என்று பாடியுள்ளதை ஆணையாக ஏற்று பெண்மையைக் காக்கவேண்டியது ஆண்மக்களின் தலையாய கடமையாகும் என்பதை அறிவோமாக!



# திருமலையில் தங்கு வசதிகள்

திருமலையில் யாத்திரிகர்கள் இலவசமாகத் தங்குவதற்கு மின்சாரம் மற்றும் தண்ணீர் வசதிகளுடன் கூடிய அறைகள் கொண்ட சத்திரங்கள் உள்ளன. இத்தங்கு வசதிகளைப் பெற திருமலை பேருந்து நிலையத்திற்கு அருகே உள்ள மத்திய வரவேற்பு அலுவலகத்தை அணுகவும். மேலும் யாத்திரிகர்கள் ஓய்வு எடுத்துக் கொள்ளும் வகையில் கொட்டகைகள் மற்றும் கூடங்களும் உண்டு. கட்டணம் செலுத்திப் பெறப்படும் தங்கு வசதிகள் மத்திய வரவேற்பு அலுவலகத்தில் செய்து தரப்படும்.

முன்கூட்டியே தங்கு வசதிகளுக்காக பணம் செலுத்தி பெயர் பதிவு செய்து கொள்ளும் யாத்திரிகர்கள் தங்கு வசதிகளுக்கான கட்டணத்தை காசோலை (D.D.) மூலம் அல்லது மணியார்டர் மூலம் செலுத்தி அக்காசோலையினை அல்லது எம்.ஓ. ரசீதினை திருமலைக்கு வரும் தேதி, தங்கும் நபர்களின் எண்ணிக்கை, செலுத்திய தொகை ஆகிய விவரங்கள் அடங்கிய கடிதத்துடன் இணைத்து குறைந்தது பத்து நாட்களுக்கு முன்பேயே, உதவி செயலாட்சித் தலைவர் (Asst. Executive Officer) வரவேற்பு I (Reception I) தி.தி.தே. திருமலை-517504 எனும் முகவரிக்கு அனுப்புதல் வேண்டும். கடிதப் போக்குவரத்து ஆங்கிலத்தில் இருத்தல் அவசியம்.

## தங்கு வசதிகளுக்கான கட்டண விவரங்கள் :

1) ஹில் வ்யூ பாதிக் குடில்கள், சங்கு மிட்டா, சேஷாத்ரி நகர், அஞ்சனாத்ரி நகர், கருடாத்ரி நகர் குடில்கள்

ஒரு பகுதி (ஹீட்டர் இல்லாதது) ரூ. 15/-

எச்.வி.டி.சி. அறைத்தொகுதிகள் (Suites) (ஒவ்வொன்றும்) ஹீட்டர் உள்ளது ரூ. 25/-

எச். வி. சி. விருந்தினர் விடுதியின் பெரிய அறைத்தொகுதி ரூ. 50/- (ஹீட்டர் உள்ளது)

எச்.வி.சி. விருந்தினர் விடுதியில் சிறிய அறைத் தொகுதி (ஹீட்டர் உள்ளது) ரூ. 25/-

மேற்கூறிய தங்கு வசதிகளுக்கு முன்பதிவு செய்தல் வேண்டும்.

2) மங்களபாவி குடில்கள், டி. பி. சி. மூன்றாவது வரிசை முதலியன

டி. பி. வெளிப்பகுதி குடில்கள் ரூ. 60/- (ஹீட்டர் உள்ளது)

வி.வி.சி., எம்.பி.சி. 31 மற்றும் 26 ரூ. 70/-

எம்.பி.சி. (ஹீட்டர் உள்ளது) ரூ. 50/-

டி.பி., ஏ.டி.சி. அறைத்தொகுதிகள் (ஹீட்டர் உள்ளது) ரூ. 15/-

ஏ. டி. சி. கீழ்த்தளம், முதல் தளம், 'ஏ' 'பி' 'சி' மற்றும் 'டி' பகுதிகள் (ஒவ்வொன்றும்) ரூ. 30/-

ஆர்ஜித சேவை செய்யும் கிருஹஸ்தர்களுக்கு மட்டுமே முன்பதிவு.

3) எஸ். வி. விருந்தினர் விடுதி மற்றும் என். ஜி. ஜி. விடுதியில் உள்ள ஒவ்வொரு அறைத்தொகுதிக்கும் ரூ. 50/-

முன்பதிவு இல்லை.

4) பயணிகள் மாளிகையின் உட்புறக் குடில்கள் ரூ. 70/-

சிறப்பமைப்புக் குடில்கள் ரூ. 100/-

எச். ஆர். ஜி. குடில்கள் ரூ. 250/-

முன்பதிவு இல்லை. காலியாக இருப்பின் ஒதுக்கப்படும்.

5) ஹில் வ்யூ சொகுசு குடிலில் மோடி பவன்

ஒரு அறைத்தொகுதிக்கு ரூ. 250/-

ஸ்ரீ நிகேதன் விருந்தினர் விடுதி அறைத்தொகுதி ஒவ்வொன்றுக்கும் ரூ. 250/-

விருந்தினர் விடுதி முழுவதும் ரூ. 750/-

இந்திரா விருந்தினர் விடுதி அறைத்தொகுதி 1க்கு ரூ. 250/-

விருந்தினர் விடுதி முழுவதும் ரூ. 1000/-

பாலகுடீரம் ஒரு அறைத்தொகுதி ரூ. 250/-

விருந்தினர் விடுதி முழுவதும் ரூ. 1500/-

ஸ்ரீ பத்மாவதி விருந்தினர் விடுதி அறைத்தொகுதி ஒன்று ரூ. 250/-

முதல் தளத்தில் பெரிய அறைத் தொகுதி மற்றும் கீழ்த்தளத்தில் அறைத்தொகுதி (ஒன்று) ரூ. 750/-

விருந்தினர் விடுதி முழுவதும் ரூ. 2500/-

கோகுலம் விருந்தினர் விடுதி (குளிர்ச் சாதனம் பொருத்தப்பட்டது) அறைத்தொகுதி (ஒன்று) ரூ. 500-/

ஸ்ரீநிவாசா நிலையம் அறைத்தொகுதி (ஒன்று) ரூ. 500/-

(திருப்புக)

ஸ்ரீநிவாசா நிலையம்
விருந்தினர் விடுதி முழுவதும் ரூ. 2500/-

வித்யா சதன
பெரிய அறைத் தொகுதி ரூ. 750/-
,, மற்றைய அறைத்தொகுதி ரூ. 500/-

கோதாவரி சதன்
அறைத்தொகுதி ஒன்று ரூ. 250/-
,, விருந்தினர் விடுதி முழுவதும் ரூ. 750/-

காம்பெல் விருந்தினர் விடுதி
அறைத்தொகுதி ஒன்று ரூ. 250/-
,, விருந்தினர் விடுதி முழுவதும் ரூ. 1000/-

முன்பதிவு கிடையாது. காலியாகும் தங்கு வசதிகளைப் பொறுத்து ஒதுக்கப்படும்.

தயைகூர்ந்து "உதவி செயலாட்சித் தலைவர், (வரவேற்பு) தி. தி.தே., திருமலை" எனும் முகவரியுடன் தொடர்பு கொள்ளவும்.

6) திருமணக் கூடங்கள் :

சங்குமிட்டா குடில்கள் கிழக்கு
எண் 272, 260, 266, 267 ரூ. 100/-

டி.பி. குடில் எண். 71 வரிசை III
எண்கள் 136 மற்றும் 152 ரூ. 100/-

ரூயா குடில், கோகினேனி குடில்
மற்றும் ஏ.டி.சி. எண். 99 ரூ. 100/-

சிதம்பரம் செட்டியார் குடில் ரூ. 100/-

ஸ்ரீ சீதாராம திருமண மண்டபம் ரூ. 1000/-

முன்பதிவுக்கு உதவி செயலாட்சித் தலைவர், (ஆர்). தி. தி. தேவஸ்தானம், திருமலை எனும் முகவரியுடன் தொடர்பு கொள்ளவும்.

ராம் பகீச்சா விருந்தினர் விடுதி
சேஷாத்ரிநகர் விருந்தினர் விடுதி ரூ. 50/-
(அறைத் தொகுதி ஒன்றிற்கு)

விதிகள் :-
* ஒரு நாள் என்பது இடவசதி வழங்கப்படும் நேரத்திலிருந்து 24 மணி நேரங்கள்.
* தேவைப்படும் இடவசதி வழங்கப்பட முடியாவிட்டால் வேறு தங்கு வசதி செய்து தரப்படும். இதனால் செலுத்தப்பட்ட தொகை அதிகமாக இருப்பின் வித்தியாசப்படும் தொகை திருப்பித் தரப்படும்.
* கூட்டம் அதிகமாக இருக்கும் நிலைகளில், தங்கு வசதி ஒருநாளைக்கு மட்டுமே வழங்கப்படும்.
* ஒதுக்கப்பட்ட கால நேரத்திற்கு மேலாக தங்கு வசதிகளைப் பயன்படுத்தினால், நிர்ணயிக்கப்பட்ட தொகையினைப் போல் மூன்று மடங்கு தொகை அபராதமாக வசூலிக்கப்படும்.
* மேலே குறிப்பிட்டுள்ள கட்டணங்களும், கால நேரங்களும் மாற்றக்கூடியன.

# திருப்பதியில் தங்கு வசதிகள்

## இலவச வசதி தங்குகள் :

திருப்பதி இரயில் நிலையத்திற்கு வடககுப் புறத்தில் உள்ள ஸ்ரீகோவிந்தராஜ தர்மசாலை மற்றும் ஸ்ரீ கோதண்டராம தர்மசாலைகளில் மேஜை, நாற்காலி வசதி இல்லாத ஆனால் சமையல் செய்து கொள்ளும் வசதிகளுடன் கூடிய இட வசதிகள் உள்ளன. யாத்திரிகர்கள் இவ் இடவசதிகளுக்காக தர்மசாலையில் உள்ள மத்திய வரவேற்பு அலுவலகத்தின் கண்காணிப்பாளரை அணுகவும். தொலைபேசி எண். 30991

## மேஜை, நாற்காலிகளுடன கூடிய இடவசதிகள் :

ஸ்ரீ வேங்கடேஸ்வரா தர்மசாலை (இரயில் நிலையத்திற்கு எதிரில்)

சிறியது ரூ. 20/- பெரியது ரூ. 30/- நான்கு படுக்கைகளைக் கொண்டது ரூ. 40/-

கண்காணிப்பாளரை அணுகவும். தொலைபேசி எண். 20103.

இரயில் நிலையத்திறகு வடக்குப்புறம் உள்ள ஸ்ரீ வேங்கடேஸ்வரா விருந்தினர் விடுதி :

அறைத்தொகுதி ஒன்று ரூ. 30/-

'உதவி செயலாட்சித் தலைவர் (வரவேற்பு) திருப்பதி' எனும் முகவரியுடன் தொடர்பு கொள்ளவும். தொலைபேசி எண். 20166.

ஸ்ரீ பத்மாவதி விருந்தினர் விடுதி (குளிர்ச்சாதன வசதியுடன் கூடியது) (சித்தூர் சாலையில் உள்ளது)

பெரிய அறைத் தொகுதி ரூ. 65/- : சிறிய அறைத தொகுதி ரூ. 40/-

திருப்பதியிலுள்ள உதவி செயலாட்சித் தலைவரை (வரவேற்ப) அணுகவும். தொலைபேசி எண். 20103.

# எண் பதினெட்டு

திரு. எம். எஸ். பிச்சுமணி,
சென்னை.

மகா பாரதம் எண்ணிக்கை அடிப படையில் மிகச் சிறப்பான ஸ்தானத்தைப் பெற்றுள்ளது.

மகா பாரதத்தின் முக்கிய பருவங்கள் பதினெட்டு.

பார்த்தசாரதி உபதேசித்த கீதையின் அத்தியாயங்கள் பதினெட்டு.

பாரத யுத்தம் பதினெட்டு நாட்கள் நடந்தது.

பாரதப் போரில் பதினெட்டு அக்ரோணி சேனைகள் கலந்து கொண்டன.

ஒரு அக்ரோணி சேனையில்

21,870 தேர்களும், 21,870 யானைகளும், 65,610 குதிரைகளும், 1,09,350 காலாட்களும் அடங்கும். ஆக மொத்தம் 2,18,700 என்ற எண்ணிக்கையின் அடிப்படையில் அமைந்திருந்தன. இந்தக் கணக்கின் சூட்சமம் என்னவென்றால் இவற்றின் கூட்டுத் தொகை பதினெட்டு ஆகவரும்.

வனபர்வத்தில், 11,664 சுலோகங்களும், சாந்திபர்வத்தில், 14,733 சுலோகங்களும் காணப்படுகின்றன. இதன் கூட்டுத் தொகையும் பதினெட்டு ஆகும்.

1. பீஷ்மர்
2. துரோணர்
3. கர்ணன்
4. விதுரர்
5. கிருபர்
6. யுதிஷ்ட்டிரர்
7. பீமன்
8. அர்ச்சுனன்
9. கண்ணன்
10. திருதிராஷ்ட்டிரன்
11. சல்லியன்
12. அசுவத்தாமா
13. துருபதன்
14. திரௌபதி
15. குந்தி
16. காந்தாரி
7. சகுனி
18. சஞ்சயன்

ஆகிய பதினெட்டு அதி அற்புதமான கதா பாத்திரங்களின் கொண்ட படைப்புதான் பாரதம்.

பீஷ்மர், பதினெட்டு வித ராஜ தர்மங்களை ஒரு அரசன் கடமையுடன் செய்யவேண்டும் என்று யுதிஷ்ட்டிரருக்கு எடுத்துச் சொல்லுகிறார்.

அரச பதவியில் அமர்ந்து விட்டால் அந்த அரசன் பதினெட்டுவித தண்ட நீதியை அறிந்திருக்கவேண்டுமென்று பீஷ்மர் எடுத்துக் காட்டுகின்றார்.

ஆட்சிமுறை அமைத்துக்கொள்ளும் போது பதினெட்டு வித அம்சங்களுடன் தன்னை ஆட்சியாளன் ஆக்கிக் கொள்ள வேண்டும் என்பதையும் பீஷ்மர் போதிக்கிறார்.

இரு பதினெட்டு ஆண்டுகள் யுதிட்டிரர் ஆட்சிப் பொறுப்பை நடத்தினார் என்பது மிகவும் குறிப்பிடத்தக்கது.

இப்படியாக பதினெட்டின் பெருமையை பாரதத்தின் மூலம் விளக்கிய மகாபுருஷர் வியாசர்.

கீதையில் பதினெட்டாவது அத்தியாயம் 66-ல் வரும்,

"ஸர்வதர்மான் பரித்யஜ்ய" என்ற அதி அற்புதமான சுலோகத்திற்குப் பெரியோர்கள்,

நாவிரண்டு - ஐயைந்து, நாலெட்டு என்று கணித அடிப்படையில் சொல்லுவார்கள்.

எனவே மகாபாரதம் கணித அடிப்படையிலும் முதன்மை பெற்றுள்ளது.

பாரததேசத்தில், இந்தப் பதினெட்டு என்ற எண் மிகவும்சிறப்பான ஸ்தானத்தைப் பெற்றிருக்கிறது.

வடமொழியில் காணப்படும் முக்கியமான புராணங்கள் பதினெட்டு என்பது குறிப்பிடத்தக்கது.

நீதி நூல்களைத் தொகுக்கும் போது பதினெட்டை மட்டும் தொகுத்து பதினென் கீழ்க்கணக்கு என்று எடுத்துக் காட்டினார்கள்.

சித்தர்கள் வரிசையில் பதினெண் சித்தர்கள் புகழ் பெற்றவர்கள்.

பதினெட்டாம் படி கறுப்பன் — சபரிமலை அய்யப்பன் போன்ற உன்னதமான கோயில்களுக்கும் பதினெட்டுப்படிகளிலே அமைத்தார்கள்.

ஆடி மாதம் பதினெட்டாம் தேதியைக்கொண்டு பதினெட்டாம் பெருக்கு என்றும் கொண்டாடினார்கள். ஆகவே இந்த பதினெட்டு பாரத தேச முழுவதும் பெருகி நிற்கின்றது. பதினெட்டின் புகழ் பார் முழுவதும் என்றும் நிலைத்துநிற்கும்.



(12-ம் பக்கத் தொடர்ச்சி)

இச் ச்லோகத்தின் மூலம் பகவான் அவாப்த ஸமஸ்த காமர் (அடைய வேண்டியதை எல்லாம்அடைந்தவர்). அதாவது அவருடைய அவதாரம் மற்ற மனிதர்கள் கர்மத்தால் பிறப்பது போலல்லாமல் தன்னுடைய கருணையாலேயே அவதரிக்கிறான் என காளிதாஸ் கூறுவதிலிருந்து அவனுடைய நேர்மை புலப்படுகிறது.

மஹிமாநம் யதுத் கீர்த்ய தவ
ஸம்ஹ்ரியதே வச: |
ச்ரமேண ததசக்த்யா வா ந
குணாநாமியத்தயா ||
(ச்லோ. 32)

(உமது பெருமை அளவிடற்கரியது. உம் குணங்கள் கணக்கிட முடியாதன. ஆகவே தோத்திரத்தை நிறுத்துவது, துதிப்பவர்களின் களைப்பினாலோ, திறமையின்மையாலோ வன்றி உமது குணங்கள் இவ்வளவு தாம் என்ற காரணத்தாலன்று)

"யதோ வாசோ நிவர்த்தந்தே அப்ராப்ய மநஸா ஸஹ" (வேத புருஷனும், வாக்குகளும் மனதுடனும் கூட பகவானை துதிக்க ஆரம்பித்து முடியாமையாலே மீண்டான்) எனும் வேத வாக்யம் நோக்கத்தக்கது.

இதி ப்ரஸாதயாமா ஸு:ஸ்தே
ஸு:ராஸ்த மதோக்ஷஜம் |
பூதார்த்தவ்யாஹ்ருதி : ஸா ஹி ந
ஸ்துதி : பரமேஷ்டின: ||

(இவ்வாறு அத் தேவர்கள் விஷ்ணுவை துதித்தனர். ஆனால் அது அவரிடம் இல்லாத குணங்கள் கூறும் தோத்திரமாக ஆகாமல் அவரிடம் உள்ளவற்றை உரைக்கும் உரையாக வ ஆயிற்று.)

ஆக இந்த துதிகளின் மூலம் காளிதாஸர் 'திருமாலே பரம் பொருள் : அவரே ஒப்புயர்வற்ற தெய்வம்' என்பதை தேவர்கள் கூறுவது போல தன் கருத்தை வெளியிட்டுள்ளான் என்பது புலனாகிறது. எனவே "உத்தர ராமாயணத்தில்" காட்டப்பட்ட இலிங்கபூசை காட்சியும் இராமனு(க்கு)டைய குல தெய்வம் என இலிங்கத்தைக் க ட்டியது காளிதாஸனுடைய நோக்கில் மிகவும் விரோதமானது; காளிதாஸன் திருவுள்ளத்திற்கும் ஒவ்வாதது என்பது பெறப்பட்ட

முற்றும்.

# பழமொழிகள் பகரும் பண்புகள்

பண்டைக்காலந்தொட்டு பழமொழிகள் பல்லோராலும் பேசப்பட்டு வருகின்றது. கிராமப்புறமாயினும் சரி, நகர்ப்புறமாயினும் சரி பேச்சுவழக்கில் பழமொழிகள் புகுந்து சடுகுடு விளையாடும். அவ்வாறு பயன்படும் பழமொழிகளில் சில சிதைவுற்றுச்சொல்மாறியும், சில பொருள் மாறியும், உண்மையை மாற்றி வேறு பொருள் கொள்ளும் நிலை ஏற்பட்டுள்ளதையும் சற்றே சிந்தித்துப் பழமொழிகளின் பண்பினை உணர்ந்தால் பயன்மிகவாகும். அந்த உண்மைகள் எல்லோரும் அறிந்து இன்புற வேண்டுமென்ற எண்ணத்தில் எழுந்ததே இக்கட்டுரை.

திரு. வெ. சுந்தரமய்யர்,

பரமக்குடி.

## "வல்லவனுக்குப் புல்லும் ஆயுதம்"

எனும் பழமொழியாவரும் அறிந்ததே. மன உறுதி கொண்டு, எடுத்த செயலை நடத்தி முடிக்க அற்பமான புல்லைக் கூட (அற்பமானவர்களின் உதவியோடு) தன் வெற்றிக்குக் காரணமாக்கிக் கொள்வான் என்ற கருத்தைத்தான் யாவரும் உணர்ந்துள்ளதாகும்.

உண்மைப் பொருள் வேறாக உள்ளது. விநாயகப்பெருமான்மாலையாக ஏற்றது அருகம்புல்மாலையை. ஏன்? விநாயகன்தம்தந்தையின்கோபத்தால் தலை அறுபட்டதும் தாய் உமை வேதனைப்பட்டாள். சிவபெருமான் கருணையால் யானையின் தலை ஒன்றை அறுபட்ட விநாயகர் கழுத்தில் பொருத்தப்பட, பின் ஆனை முகனாக விளங்கினார். இது புராண வரலாறு. புராணத்திற்கும் புல்லுக்கும் என்ன சம்பந்தம் என எண்ணத் தோன்றும். புராணங்கள் ஒவ்வொரு மனிதனுக்கும் வாழ்வாங்கு வாழ, அறிவியல் முறையில், மனோதத்துவ முறையில் உயிர் ஆசானாக, உற்ற நண்பனாக விளங்குவதை உணரும் போதுதான் வியத்தகு விந்தைகளை புராணங்கள் தந்து, உலகினை உன்னத நிலையில் ஒழுக்க நெறியோடு பக்தியுடன் பரிணமிக்க பயன்தர வல்லதெனத் தெளிவாகும்.

கழுத்தில் அறுபட்ட இடத்தில் யானை முகம் பொருத்தப்பட்டது. ஒட்டுவிக்கும் குணம் கொண்ட உயர்ந்த மருத்துவப் பொருளான அருகம் புல்லை வெட்டுப்பட்டஇடத்தில் வைத்துக் கட்டியதும் வெட்டுப்பட்ட, ஒட்டுவித்தத் தழும்பு கூட இல்லாமல் குணமாகியது. வெட்டுப்பட்ட இடத்தில் அருகம்புல் வைத்துக கட்ட விரைவில் குணமாவதோடு ஊறு நேர்ந்ததே என்று வேதனை கொள்ளாமல் வலிமையைக் கூட்டும் மருந்துமாகும். ஞானவடிவான ஓங்கார வடிவினன் கணநாதன். அவனருளால் நமக்கும் நல்லறிவு நாளும் வளர்ந்தோங்க அருகம்புல்லைத் தினமும் ஒன்றிரண்டு கொழுந்தினை உட்கொண்டு விநாயகனை வழிபட்டு வர அறிவு வளரும்.

மந்தமாக இருக்கும் செயல் விரைவாகச் செயல்படத் தூண்டுகோல் ஒன்று தேவை. மின்விளக்கு எரிய 'சுவிச்சு' தேவை. அதுபோல்அறிவைத் தூண்ட தலையில் குட்டிக் கொள்வதும் நெற்றியில் திருநீறு அணிவதுமாகும். அறிவை வளர்க்கும் அற்புத மருந்தாக அருகம்புல் அமையும். இதை உணர்த்த பக்தி மார்க்கமாக அருகமபுல் பறித்தல், மாலைக்கட்டல், வினாயகருக்கு அணி



ஸ்ரீ பால பிரம்மேஸ்வரர் கோயில்—அலம்பூர் (ஆ. பி.)

வித்தல் என்ற பணிகளில் அருகம் புல்லைத் தொட்டும், இதன் மீது படும் காற்றை சுவாசிப்பதும், பிர சாதமாக கொழுந்து உட்கொள் ளலும் அறிவைத் தூண்டும், ஞானத் தில் வல்லவனாக ஆக்கும் என்பதை விளக்குவதே, அறிவில் வல்லவனாக அருகம்புல்லே உயர் ஆயுதம் என்ற நிங்கருத்தை உணர்த்துவதே "வல்ல வனாக புல்லே ஆயுதம்" என்பது சிதைந்து 'வல்லவனுக்குப் புல்லும் ஆயுதம்' என வழங்கலாயிற்று.



தேவியருடன் ஆறுமுகர், திரு- எம். ராஜகோபாலன் - சென்னை.

## "நாலுபேர் சொன்னபடி"

"நாலுபேர் செல்லும் பாதை நமக்கும்" என்பது ஓர் பழமொழி. இது பல்வேறு வகையாக சொல் மாற் றம் பெற்றுத் திகழும் — அவற்றுள் சில.

"நாலுபேர் சொல்லுவந்த நாம் கேட்போம்"

"நாலுபேர் போன பாதை நல்ல பாதை"

"நாலுபேர் போல நாமும் வாழ வேணும்"

"நாலுபேர் சொல்லுக்கு மறுப் பேது?" இவ்வாறு ஒரே கருத்தை வலியுறுத்தும் பழமொழிகள். இதில் "நாலுபேர்" என்ற சொல் மட்டும் மாறவேயில்லை. இதிலிருந்து அவர வர் எண்ணத்திற்கேற்ப வார்த்தை கள் மாறுபாடு அடைவதை உணர முடிகிறது. இந்தப் பழமொழியில் "நாலுபேர்" என்ற மாறாத சொல்லை அறிந்தால் பொருளின் உண்மையும் மேன்மையும் தெள்ளி தின் விளங்கும்.

அந்தநாலு பேர் யார்? அவர்கள் தான் தேவாரம் தந்த திருத் தொண் டர்களாம் அப்பர், சுந்தரர், மாணிக்க வாசகர், திருஞானசம்பந்தர் என்ப வர்களாவார்.

இறைவனது அருள் பெற்றவர் கள். அவர்கள் பெற்ற இன்பத்தை அனைத்து மக்களும் பெற வேண்டும் என விரும்பியவர்கள். பக்தியும் சக்தி யும் பாரினில் ஓங்க, பண்பும் பயனும் பாரதத்தில் பரந்து விரிந்து. நன்மை கள் நாட்ட விரும்பிய நல்லவர்களாம் அந்த நால்வர். "சூலை நோய்" தந்து தடுத்தாட்கொண்டார் சிவ பெருமான், திருநாவுக்கரசர் என் னும் பெரியவரை. திருஞானசம்பந்த ரால் "அப்பரே" என்று அழைக்கப் பெற்ற அற்புதத்தொண்டர். கோயில் களின் உழவாரப்படை கொண்டு தூய்மைப் பணிசெய்தும், பதிகங்கள் பாடியும் பக்தியைப் பண்ணோடு வளர்த்தவர்.

"பாலை"க்கொடுத்து பாலகனைத் தமிழ்த்தொண்டு செய்ய சிவனார் அளித்த செல்வர் திருஞான சம்பந் தர் ஆவார். சாதிமத வேறுபாடு இன்றி சமத்துவ நெறியால் தமிழ் வளர்த்த தண்டமிழ்த்தொண்டர்.

"ஓலை"யைக்காட்டி ஒப்பில்லாத் திருவிளையாடல் நிகழ்த்தி தடுத் தாட் கொண்டார் சிவபெருமான். அந்த அனுக்கத் தொண்டர்தான் "கறைபடியாக்கை" தன்னைக் கொண்ட சுந்தரர். அந்தணராகப் பிறந்து அரசரால் வளர்க்கப்பட்டு சிவனாரின் செயலால் சீரிய தொண்ட ராக அமைந்து செந்தமிழினை வளர்த்துச் செம்மை சேர்த்தவர் சுந்தரர் ஆவார்.

"காலை"க் காட்டி, நடமாடிக் காட்சி தந்து கவினுறு பாமாலை சூட்ட வைத்தார், ஆனந்த நடம் புரியும் அற்புதக்கலை வல்லோன். நடன நாயகனைக் கண்டு மானிடப் பிறவியே வேண்டும் எனப் பாடிய மாணிக்கவாசகரே அந்த மகான்.

"வான் கலந்த மாணிக்க வாசக நின் வாசகத்தை
யான் கலந்து பாடுங்கால் நற்கருப்பஞ் சாற்றினிலே
தேன் கலந்து பால்கலந்து செழுங்கனித் தீஞ்சுவைகலந்து
ஊன் கலந்து உயிர்கலந்து உவட்டாமல் இனிப்பதுவே"

என்று அருட் பிரகார சுவாமிகளால் கொண்டாடப்பட்டவர் மாணிக்க வாசகர் என்றால் வாசகரின் பெரு மைக்குச் சான்று வேறு ஏதுவேண்டும்?

மேற்கூறிய நால்வரின் வழியில், அவர்களது தமிழ்த்தொண்டு, பக்தி, சமயத்தொண்டு, சமுதாயத்தொண்டு புரிந்து வாழ்வாங்கு வாழவேண்டும் என்ற உயர்கருத்திலே உதித்த பழமொழிதான் "நாலுபேர் காட்டிய பாதை நமக்கு உகந்த பாதை" என்பதை உணர்ந்து உயர்வு பெற முயற்சிப்போம்.

## "முன்கை நீண்டால முழங்கை நீளும்"

கையின் பயன் பிறருக்கு உதவுதல். பிறருக்கு உதவுவதற்காகத் தன் முன்கையை நீட்டியதும் தொடர்ந்து முழங்கைவரை நீண்டு ஆதரவான ஒத்துழைப்பை நல்கும் என்பது நடைமுறையில் உள்ள பொருள் ஏற்றமுடையதேயானாலும் உண்மைப் பொருள் மிக ஏற்றமுடையதாகவும் இறையருளைத் தருவதாகும் உள்ளதென்பதை அறியும்போது பழமொழியின் சிறப்பு பேரின்பம் தருகின்றது.

உளமார இறைவனை வழிபடும்போது முன்கைகள் இரண்டும் ஒன்று சேர்ந்து கைகூப்பும் போது பணிவும் பக்தியும் பரிமளிக்கும். பக்தியுடன் முன்கைகள் இரண்டையும் தலைக்கு மேல் நீட்டி, மனம் மெய் இரண்டும் இறைவனுக்கே அர்ப்பணம் என வணங்க வேண்டும். அவ்வாறு மன, மெய், மொழிகளால் வணங்கும் போது இறைவனது முழுமையான அன்புக்கரம் அபயம் அளிக்கும்; இறைவனின் கருணை இனிதே அமையும். ஆடை அவிழ்ப்பு நேரத்திலும் ஆண்டவனே கதி என கரம் கூப்பிய பாஞ்சாலிபோல ஆண்டவனை வணங்க முனைதாக இருகரங்களையும் சிரமேற்கூப்புதலையும், முழுமையான பக்தியின் பயனை இறைவன் உணர்ந்து உயர்பேறு பெற வைப்பதையும் காட்டும் பழமொழியாக "முன்கை நீண்டால் முழுக்கரம் நீளும்" என்று அமைந்தது. இதை உணர்ந்து இருகரம் கூப்பி பழமொழி தந்த பெரியோரைப் பணிந்து இறைவனைப் பணிந்து புகழ்பெற முயற்சிப்போம்.

## "தொட்டில் பழக்கம் சுடுகாடு மட்டும்"

நடைமுறை வாழ்க்கையில் பயிற்சியால் கொள்ளும் பழக்கம் இறக்கும் வரை நீடிக்கின்றது. பெற்றோர் பயிற்சி தருவதும், சூழ்நிலை வாயிலாகவும்ஏற்படுவதுமான பழக்கத்தை என்றும் விடமுடியாத நிலையில் மக்கள் கைக்கொண்டு வாழ்வதைக் காணமுடிகின்றது.

நல்லதோ, தீயதோ பழகிவிட்டால் அதை விட்டுவிட முடியாதபடி அப்பழக்கத்திற்கும் அடிமையாகி விடுவதைக் காண்கின்றோம். சிறுவயதில் ஏற்பட்ட பழக்கம் வழக்கமாக மாறி வாழ்வோடு இணைந்து விடுகிறது என்பதைத்தான் இதன் பொருளாகக் கொண்டிருந்தாலும் உண்மையில் இதன் பொருள் நன்மையை நாடுவதற்காக ஏற்படுத்தப்பட்டதேயாகும்.

பிறந்த குழந்தையைத் தொட்டிலில் இட்டுப் பாட்டுப்பாடி உறங்க வைப்பது வழக்கம்.

"கோசலை பெற்ற கோமானே
கண்வளராய்
கோசிகரின் சீடனாய் சிறந்தவனே
கண்வளராய்
கண்ணனாய் வந்திங்கு கலிதீர்த்த ய்
கண்வளராய்
மண்ணாளும் மன்னவனே
என்மகனே கண்வளராய்"

எனப் பலவாறு இறைநாமத்துடன் இனிதே வாழ வாழ்த்திப் பாடுவது தாய்மார்கள் கொண்டபணி. உறங்க வைக்கும் போதும் "கண்வளராய்" என்ற மங்கலச் சொல்லே பயன்படுத்துவார்கள்.

பெற்றோர்கள் இளங்குழவிகளைத் தொட்டிலில் இட்டுத் தூங்கவைக்கும்போது உணர்த்தும் நன்னெறிகள் குழந்தையுடன் இரண்டறக்கலந்து விடுகிறது. மீண்டும் மீண்டும் போதிக்கும் போது ஏற்கும் உள்ளம் பண்புடையதாகிறது. பண்பட்ட உள்ளத்தை மண்ணுக்குள் உடல் மறைத்திட்ட போதும் அது என்னாளும்நிலைத்த புகழை நாட்டும்.

அபிமன்யு தாயின் வயிற்றில் இருக்கும்போது, கண்ணன் அர்ச்சுனனுக்குப்போர் வியூகம் போதித்ததைக் கேட்டதும், பிரகலாதன் தாய் வயிற்றில் இருக்கும் போது நாரதர்



ராதே! உனக்கு கோபம் ஆகாதேடி!
திரு. கோவை சித்தாராம்.

"ஓம் நமோ நாராயணாய" என்று உபதேசித்ததும் ஏன்? என சிந்திக்க வேண்டும். எண்ணம் செயலாக இன்பம் இனிதாக பிறப்பு முதல் இறப்பு வரை நடைமுறைப்படுத்த நல்லதே உபதேசிக்க வேண்டும். நல்லதே செய்தும் பழக்கவும் வேண்டும்.

தொட்டில் பருவ முதலே தொண்டுள்ளம் வளர்த்து, ஏட்டுக் கல்வியுடன் நாட்டுச் செயலால் நலம் விளைவிக்கத் தாய்மார்கள் உறுதி கொள்ளவேண்டும். அவ்வுறுதிப்பாடு தங்களுக்கு எந்த நிலை வந்தாலும் மாறாது, இறை வழிபாடு மாண்புறச் செய்ய வேண்டும். தொட்டிலுக்குக் குழந்தையைத் தந்தவனும் அவனே! சுடுகாட்டுக்கும் தலைவன் அவனே. ஆக்கியவன் எவனோ அவனே அழிப்பவன். இவ்விரண்டுக்கும் இடைப்பட்ட காத்தல் அவன் செயல் என்பதை மறந்து "நான்" என்னும் அகம்பாவம் கொண்டு வாழ்வதை மறந்து, தொட்டிலுக்குத்தந்து, சுடுகாட்டு நிலைக்கும் தரக்கூடியவனை இட்டமுடன் வேண்டிப் பணிந்து மேன்மைபெற வேண்டும். இறைவனே எல்லாம் என்ற தன்மையுணர்ந்து அவனைப் போற்றிப் பணிந்து புகழ் பெற வேண்டும். இவ்வரிய கருத்தை வெளிப்படுத்துவதே "தொட்டில் பழக்கம் சுடுகாடு மட்டும்" எனும் பழமொழியாகும்.



திருமலையில்



ஸ்ரீ பிரசன்ன வேங்கடேஸ்வாசுவாமி கோயில், நடுவில் ஒற்றைக்கல் கோபுரம். ராமதுர்க்கம். (ஆ. பி.)

ஆக்கல், அளித்தல், அழித்தல் ஆகியன யாவும் அவன் செயல். அவனன்றி ஓர் அணுவும் அசையாது என்பதால் பிறப்பின் பயன் இறப்ப வரை அவனுக்கு உகந்த தொண்டு செய்வதேயாகும்.

(தொடரும்)

# சிந்தாமணி

"கணன் மூவுலகிற்கும் அதிபதியாய் இருந்தென்ன? உயிரைப்போல் நான் பாதுகாத்து வந்த சிந்தாமணி மாலையை பலாத்காரமாய் பறித்துச் சென்று விட்டானே! இது அவன் அழிவுக்கே" என்று கணராஜனை சபித்து விட்டாலும் மனம் அடங்காதவராய் ஹோமம் செய்யத் தொடங்கினார் கபில முனிவர்.

ஹோமகுண்டத்திலிருந்து தீ ஜ்வாலையாய் எழுந்த பெண் ஒருத்தி, "கபில முனிவரே! நான் விஷ்ணுவின் மாய சக்தி. என் பெயர் சாருகாசினி என்பது. எதற்காக நீ ஹோமம் வளர்த்து ஜபம் செய்கிறாயோ அது ...மும்மூர்த்திகளாலும் தேவர்களாலும் சாத்தியமாகாது. கணன் சாகா வரம் பெற்றவன்.

கணனை சாதாரணமானவனாகவும் நினைக்காதே. வைசம்பாயனர் உபதேசித்த பஞ்சாட்சர மந்திரத்தை ஜபித்து அபிசித் ராஜன் இவனைப் பெற்றான். பிறந்தது முதலே கணன் பராக்கிரமம் பொருந்தியவனாய் இருந்தான். சூரிய சந்திரர்களின் சஞ்சாரத்தை நிறுத்தி வேடிக்கைப் பார்ப்பான். பஞ்ச பூதங்களையும் தன்னிஷ்டப்படி ஆட்டிப் படைப்பான். மதம் பிடித்த யானையை ஆயுதமின்றி வெறும் கைகளாலேயே அடக்கும் திறன் பெற்றவன். உடல் வலிமையோடு மனவலிமையும் நல்ல குணங்களையும்பெற்று நல்லாட்சி செய்பவன் 'கணன்' என்று கூறி மேலும் கூறியதாவது.

ஆட்சிப் பொறுப்பை ஏற்றவன் அன்ன ஆகாரமின்றி கடுந்தவம் புரிந்து தேவர்களிடமும் மூவர்களிடமும் அளவில்லாத அழிவில்லாத வரங்களைப் பெற்றான். வரங்களைப் பெற்றவன் சும்மா இருப்பானா? மூவுலகையும் தன் ஆதிக்கத்தின் கீழ் கொண்டுவர நினைத்தான். அவன் பெற்றிருக்கும் வரங்களையும் அவனது பராக்கிரமங்களையும் அறிந்திருந்ததால் பூவுலகினர் யாரும் அவனை எதிர்க்கத் துணியாமல் அவன் ஆதிக்கத்தை ஒப்புக்கொண்டனர்.

பூவுலகை சுலபமாய் வசப்படுத்தி விட்ட கணன், இந்திரலோகம் சென்றான். இந்திரன் அவனுக்கு நல்ல வார்த்தைகளைக் கூறி திரும்பிப் போகும்படிச் சொன்னான். கணன், தேவராஜனே! என்னோடு போர் புரிய நீஅஞ்சினால் என் ஆதிக்கத்தை ஒப்புக்கொள் என்றான். கோபம் கொண்ட இந்திரன் கணனை எதிர்த்தான். ஆயினும் முடிவில் தோற்றான்.

தன்னால் சிறை பிடிக்கப்பட்ட தேவராஜனை விடுவித்து, ஏ தேவராஜனே! இந்திரலோகம் உனதாகவே இருக்கட்டும். உன் பணிகளும் வழக்கம்போலவே நடக்கட்டும். அவைகளில் நான் தலையிட மாட்டேன். ஆனால் நீயோ உன் உலகைச் சார்ந்தவர்களோ என் கட்டளைகளுக்குப் பணிய மறுத்தால், மீண்டும் என் அதிகாரத்தைக் காட்டத் தயங்கமாட்டேன், வருகிறேன் என்று சொல்லி பிரம்மலோகம் சென்றான்.

பிரம்மதேவன் கணனோடு போரிடுதல் பயனற்றது என்பதால் அவனை வரவேற்று அவன் ஆதிக்கத்தை ஒப்புக்கொண்டு பொன்னும் மணியும் கொடுத்தனுப்பினார்" என்று கணராஜனைப் பற்றிக் கூறி முடித்தாள் சாருகாசினி.

"அப்படி என்றால் கணராஜனை வென்று என் சிந்தாமணி மாலையை மீட்டுத்தர வல்லவர்கள் எந்த லோகத்திலும் இல்லையா?" என்று கூறிக் கலங்கினார் கபிலர்.

"முனிவரே! கலக்கம் வேண்டாம். மூவர்க்கும்முன்னவனாய்,மூவுலகத்திற்கும் முதல்வராய் விளங்கும் விநாயகப் பெருமான் உன் குறையைப் போக்குவார். நீ அவரைக் குறித்து முறைப்படி ஹோமம் வளர்த்து ஜபம் செய்" என்று சொன்ன சாருகாசினி விநாயகரை எப்படிப் பூஜிப்பது என்பதை எல்லாம் கபிலருக்குச் சொல்லி பஞ்சாட்சர மந்திரத்தையும் உபதேசித்து மறைந்தாள்.

கபிலர் ஹோமம் வளர்த்து ஜபம் செய்து தவமிருந்தார்.

அவர் கடுந்தவத்துக்கு மனமிரங்கிய விநாயகப் பெருமான், "கபில முனிவரே! உமது மனோரதத்தை நிறைவேற்றுகிறேன். சிந்தாமணி மாலை உனக்குத் திரும்பவும் கிடைக்கும்" என்று கூறி மறைந்தார்.

**T. R. மேகலை**
செங்கல்பட்டு

தான் கபிலருடன் சண்டை செய்வதைப் போலவும், அதில் ஐந்து கரங்களை உடைய வீரனின் மழுவாயுதத்திற்குத்தான்பலியாவதைப்போலவும் அன்றிரவு கணன் ஒரு பயங்கரமான கனவைக் கண்டான். அதைப் பற்றி கணன் தன் பெற்றோர்களிடமும் மந்திரி பிரதானிகளிடமும் சொல்லி ஆலோசனை நடத்தினான்.

"அழிவற்ற வரங்களைப் பெற்றத் தாங்கள் இந்தக் கனவிற்கா பயப்படுவது?" என்று ஒருவன் சொன்னதற்கு கிரந்தன் என்ற அமைச்சன், "அரசே! இதை வெறும் கனவென்று எண்ணுவது மதியீனம். கபில முனிவரின் சாபமே இது என எண்ணுகிறேன். அதனால் சிந்தாமணியை முனிவரிடம் திருப்பிக் கொடுத்து விட்டு மன்னிப்பைக் கோருவது நலம்" என்

## சந்தாதாரர்களுக்கு...

30-11-90—ஆம் தேதியுடன் முடிவடையும் ஸப்தகிரி சந்தாதாரர் களின் எண்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன. சந்தாவைப் புதுப்பித் துக்கொள்ளும்போது, தங்கள் சந்தா எண்களைக் கண்டிப்பாகக் குறிப் பிடவும். புகார்களுக்கும்,விவரங்களுக்கும் 'ஆசிரியர்'ஸப்தகிரி,தி.தி.தே. திருப்பதி எனும் முகவரியுடன் ஆங்கிலத்தில் தொடர்பு கொள்ளவும்.

48 52A 67 117 119 121 123 124 209 248 249 345 418 422 423 425 430 431 433 437 438 565 577 582 844 847 848 860 865 869 870 1961 2093 2129 2130 2139 2140 2144 2158 2163 2177 2189 2198 2202 2204 2222 2236 2277 2578 3242 3587 3588 3595 3598 3604 3607 3608 3611 3613 3618 3628 3638 3642 4513 4784 4785 4790 முதல் 4792 4796 முதல் 4798 4800 4803 முதல் 4805 4815 4818 முதல் 4821 4824 4827 4828 4839 4844 4845 4847 4848 4851 4853 4855 முதல் 4861 4863 4867 4868 4872 4874 4880 4882 4883 4887 4889 4891 4893 4897 4902 4905 4906 4910 முதல் 4912 4917 4921 4922 4929 4944 4947 5029 5724 5810 5811 5985 6009 6268 6345 6411 6436 முதல் 6440 6443 முதல் 6463 6465 6466 6473 6474 6476 6492 முதல் 6494 6496 6497 முதல் 6500 6503 6505.

றான். கணனின் பெற்றோர்களும் இதே கருத்தையே வலியுறுத்தினார் கள்.

விநாச காலத்தில் விபரீத புத்தி தான் தோன்றும் என்பதற்கேற்ப கணன் தாய்தந்தையரின் பேச்சையும் உண்மையான மந்திரியின் ஆலோசனையையும் புறக்கணித்து, "இது வெறும் கனவுதான் அரசே. இதற்கு அஞ்சினால் தங்களின் பராக்கிரமம் என்னவாவது? பேசாமல் கபிலரைக் கொன்று விட்டால் பயப்படத் தேவையேஇல்லை" என்ற வெறொரு அமைச்சனின் கருத்தை ஏற்று கபிலர் மீது போருக்குப் போனான் கணன்.

கபிலர் விநாயகரைத் துதித்து நிற்க, விநாயகர் சித்தி, புத்தி சமேத ராய் சிங்க வாகனத்தில் எழுந்தருளி கபிலருக்கு அபயமளித்தார்.

கணன் முதலில் தன் இரு பிள்ளை களையும் போருக்கு அனுப்பினான். மார்தட்டிப் பெருவீரம் பேசிய பிள் ளைகள் இருவரும் விநாயகரின் படைகளோடு கடும்போர் புரிந்தார் கள். எனினும் இலக்கன் என்பவனால் அவர்கள் சிறை பிடிக்கப்பட்டனர்.

கணராஜனின் படைகள் சிதறி ஓடி யன. செய்தி கணனுக்குத் தெரிந் தது. அவன் கலக்கமுற்றான். கிரந் தன் முன் சொன்ன யோசனையையே இப்போதும் சொன்னான். கணன் அதை ஏற்கவில்லை. "என்ன ஆனா லும் சரி, அந்தத் துறவியிடம் நான் மன்னிப்பும் வேண்ட மாட்டேன். சிந்தாமணியையும் திருப்பித்தர மாட்டேன்" என்று கூறி சிதறிய படைகளை ஒன்று கூட்டி ஒழுங்கு படுத்தித்தானே படை நடத்திச்சென் றான்.

அரசனின் படைகள் ஆவேசமாய் விநாயகரை எதிர்த்தது. விநாயகர் கணராஜனின் படைகளை அலட்சி யம் செய்து,கணனிடம் போக அவன்.

"ஏ கபில முனியே! இவன்தான் என்னைக் கொல்ல உன்னால் தோற்றுவிக்கப்பட்ட வீரனா? பாவம் சிறுபிள்ளையாய் இருக்கிறான். உரு வமும் விநோதமாய் இருக்கிறது. போனால் போகட்டும். அந்தச் சிறு வனை என் காலில் விழுந்து மன்னிப் பைக் கேட்கச் சொல். உயிர்ப் பிச்சை அளிக்கிறேன். இல்லையேல் அந்த ஐந்து கரமும் ஆனை முகமும் கொண்டவனோடு உன்னையும் சேர்த்து அழித்து விடுகிறேன்" என்று விநாயகரைக் கண்டு நகைத்தான்.

கபிலர் அமைதியாய்ச் சிரித்தார். "ஏ கணராஜனே! அளவற்ற வரங்களைப் பெற்றாய். அழிவற்ற ஆயுளையும் பெற்றாய். இருந்தும் பயன் என்ன? ஆணவம் உன்னை ஆட்டிப்படைக்கிறது. இப் போது நீ விநாயகரைச் சரணடைந் தால் நலம் பெறுவாய். இல்லையேல் ......" எனக் கபிலர் சொல்லிக் கொண்டிருக்கும் போதே கணன் அலட்சியமாய்ச் சிரித்து பாணங்களை விநாயகர்மேல் சரமாரியாய்ப் பொழிந்தான்.

கோபம் கொண்ட விநாயகர், "கணராஜனே! மூவுலகும் உன் ஆதிக்கத்திலிருந்து விடுபட்டு விடும் நேரம் நெருங்கி விட்டது. இதோ என மழுவாயுதம்,இதிலிருந்து நீ தப் பவே முடியாது" என்று சொல்லி விநாயகர் மழுவாயுதத்தை ஏவ, அது அவன் சிரத்தைத் துண்டிக்கிறது. அச்சமயம். எண் திசையிலிருந்தும் சங்கநாதம் முழங்க, தேவர்கள் பூமாரிப் பொழிந்து தங்கள் துன்ப மும் துயரமும் ஒழிந்தது என்று விநாயகரைப் பணிந்து நின்றனர்.

கணன் இறந்த சேதி அபிசித் ராஜ னுக்குத் தெரிவிக்கப்படுகிறது. புத் திர சோகத்தால் மகனை நினைத்து

# இரணியல் இராதாகிருஷ்ணன் கோயில்

கன்னியாகுமரி மாவட்டம் இரணியல் இராதாகிருஷ்ணபுரத்திலிருக்கும் இராதாகிருஷ்ணன் கோவில் மிகப் பிரசித்தமானது. இராதாகிருஷ்ணன் கோவில் திங்கள் நகர் சந்திப்பில், நாகர்கோவிலிலிருந்து 12 கிலோ மீட்டர் தொலைவில் உள்ளது.

கோவிலின் அமைப்புச் சிறிதாக இருந்தாலும் கீர்த்தி பெரிது. இந்தக் கோவிலில் இராதா - கிருஷ்ணன் - கணபதி ஆகிய மூர்த்திகள் உள்ளன. இந்தக் கோவிலில் வழிபட தினமும் நூற்றுக்கணக்கான பக்தர்கள் சுற்றுப்புறக் கிராமங்களிலிருந்து வருகின்றனர்.

இங்கிருக்கும் கிருஷ்ணன் மிகச்சக்தி வாய்ந்தவர். நோயுற்றவர்கள் இந்த கிருஷ்ணனை நாற்பத்தியொரு நாட்கள் பக்தியுடன் வழிபட்டால் நோய் பூரணமாக குணமடைகிறது. நினைத்ததை நடத்தித்தரும் இவருக்குப் பால் அபிஷேகம் செய்கின்றனர் நேர்ச்சை செய்வோர்.

மாதா மாதம் ரோகிணி நட்சத்திரத்தன்று கழிந்த பன்னிரண்டு ஆண்டுகளாக 108 திருவிளக்கு பூஜை நடைபெறுகிறது. குமரி மாவட்டத்திலேயே 108 திருவிளக்கு பூஜை இந்தக் கோவிலில்தான் முதன் முதலில் துவங்கியது. இந்த 108 திருவிளக்கு பூஜை நடத்த பக்தர் சிவசுப்பிரமணிய பிள்ளைக்கு யோசனை சொன்னவர் ஓர் ஒன்றியத்தின் பெருந்தலைவராக இருந்த தி. மு. க. பிரமுகர் ஒருவர். 108 விளக்குகள் முன் தீபாராதனைக்கான பழம், வெற்றிலை, பாக்கு,சூடம் போன்றவை வைத்து விளக்கேற்றி 108 பெண்கள் பூஜை செய்யும் காட்சி கண்கொள்ளாக் காட்சியாகும். பூஜையில் இடம்பெற பல்வேறு ஜாதியைச் சேர்ந்த பெண்கள் போட்டி போட்டுக் கொண்டு முன்வருகின்றனர்.

பிரபல மண்டைக்காடு பகவதி அம்மன் கோவில் விழாவுக்கு வருகை தரும் லட்சக்கணக்கான கேரள பக்தர்கள் இந்தக் கோவிலில் வழிபட்ட பின்னரே அருள்மிகு பகவதி கோவிலுக்குச் செல்கின்றனர்.

இராதாகிருஷ்ணன் அருள் பெற்றிட பக்தர்கள் நாளும் படையெடுக்கின்றனர்.

— தகவல் : வழக்கறிஞர் இரணியல் ரவி

பலபடியாய் புலம்பினான் அரசன். அப்போது, "அரசே! நடந்தது நடந்து விட்டது. மனதைத் தேற்றிக்கொண்டு சிந்தாமணி மாலையை கபிலரிடம் ஒப்படைத்து தங்கள் வம்சத்துக்கு நேர்ந்த அபகீர்த்தியைப் போக்க முனிவரிடம் மன்னிப்பைக் கேளுங்கள்" என்றார் கிரந்தன் என்ற அமைச்சர்.

அபிசித் ராஜனும் கிரந்தன்சொன்னபடியே சிந்தாமணியைக்கொண்டு சென்று முனிவரிடம் கொடுத்துப் பணிந்து மன்னிக்க வேண்டினான் முனிவரும் அரசனை ஆசிர்வதித்து "அரசே! கணராஜனின் புதல்வர்கள் இறக்கவில்லை. அவர்கள் இருவரும் விநாயகரின் பூரண அருளைப் பெற்றிருக்கிறார்கள். அவர்களுக்கு முடிசூட்டி, நாட்டை அவர்களிடம் ஒப்படைத்து விடு" என்று கூறி விநாயகரைத் துதித்தார்.

விநாயகரும் கபிலர் முன் பிரத்யட்சமாகி முனிவரையும், அரசனையும், இளவரசர்களையும் வாழ்த்தினார்.

கபிலர் விநாயகரைப் பணிந்து, "சர்வேசா! தாங்கள் சொன்னது போலவே சிந்தாமணி மாலை எனக்குத் திரும்பக் கிடைத்தது" என்ற கபிலர், அரசனைப்பார்த்து அபிசித்ராஜனே இந்தமாலைதேவேந்திரனால் எனக்கு அளிக்கப்பட்டது. சகல லோகங்களிலும் இருக்கும் அதிசயங்களைப் பார்த்துக் கொண்டு என் ஆசிரமத்துக்கு தேவேந்திரனும் தேவர்களும் வந்தபோது, இந்திரன் என்னைப் பணிந்து, 'சுவாமி! சிவன் மகாவிஷ்ணு, ஆலயங்கள், பெரியோர்கள், அரசமரம், அக்னி ஆகியவைகளைக் கண்டால் பணிந்து செல்ல வேண்டும் என்பது சாஸ்திரங்கள் கூறும் விதி. அதன்படித் தங்களை தரிசிக்க வந்திருக்கிறோம் என்றான்.

அவனும் அவனைச் சேர்ந்தவர்களும் பசியுடன் இருந்ததால் மகேஸ்வரனைத்தியானித்து அவர்கள் பசி போக்க உணவளிக்குமாறு பிரார்த்தித்து தேவர்களையும் இந்திரனையும் உபசரித்தேன்.

இந்திரன் மனமகிழ்ந்து விஷ்ணுவிடமிருந்து இந்தச் சிந்தாமணி மாலையை எனக்கு அளித்தான். இதையே உனது மகன் என்னிடமிருந்து பேராசையால் பறித்துச் சென்றான். அதற்கான தண்டனையையும் அவன் பெற்று விட்டான், வருந்தாதே" என்ற கபிலர், விநாயகரைப் பலவாறாய்த் துதித்து, "ஐயனே! கேட்பவர்க்குக் கேட்டதெல்லாம் கொடுக்கும் இந்தச் சிந்தாமணி மாலை உன் பேரருளால் எனக்கு மீண்டும் கிடைத்தது. இனியும் இது என்னிடம் இருத்தல் முறையாகாது. ஆகவே எம்பெருமானே இம்மாலையை நீங்களே ஏற்று அணிந்து கொள்ள வேண்டும். உன்னைப் பணியும் அன்பர்களுக்கு குறையின்றி அருளவேண்டும். இனி தங்களைச் 'சிந்தாமணி விநாயகர்' என்று விண்ணவரும் மண்ணவரும் அழைக்கவும் அனுமதிக்க வேண்டும்" என்று வேண்டினார்.

விநாயகரும் கபில முனிவரின் கோரிக்கையை ஏற்றுச் சிந்தாமணி மாலையை மகிழ்ச்சியுடன் அணிந்து கபிலரை ஆசிர்வதித்து மறைந்தார்.

✱

(4-ஆம் பக்கத் தொடர்ச்சி)

வது அகண்ட விஷ்ணுஸகஸ்ரப்ரநாம ஜபயக்ஞம் எனும் சமய விழா 1-8-90 மற்றும் 2-8-90 தேதிகளில் வெகுச் சிறப்பாக நடைபெற்றது. 1-8-90 அன்று காலை திருமலை மாடவீதி களில் பக்தர்களின் திருவீதிவலம் நடைபெற்றது. பின்னர் சதஸ் அரங் கில் நடைபெற்ற துவக்க விழா நிகழ்ச்சிகளுக்கு வருகை புரிந்தோரை தி. தி. தே. தர்ம பிரசார பரிஷத் செயலர் திரு. ஏ. வெங் கட சுப்பய்யா அவர்கள் வரவேற்றுப் பேசினார். பின் னர் தொடர்ந்து ஸகஸ்ரநாம ஒலிப் பேழைகளை மேற்படி அறக்குழு சார் பில் வெளியிட்டார். முதல் ஒலிப் பேழையினைப் பெற்றுக் கொண்ட தி. தி. தே. செயலாட்சித் தலைவர் திரு. எம். வி. எஸ். பிரஸாத் அவர் கள் தம் சிறப்புரையில் சாமான்யரும் சமயத் துறையில் ஈடுபடும் வண்ணம் இதுபோன்ற 'ஸகஸ்ர நாம' பாடல் களின் பொருளினை யாவரும் புரிந்து கொள்ளும் வகையில் முயற்சிகளை சம்பந்தப் பட்டோர் மேற்கொள்ள வேண்டும் என்று கூறினார். தொடர்ந்து பேசுகையில் கிராமங் களில் உள்ள சாதாரணமானவரும் இந்து சமயப் பெருமையினை உண ரும் வகையில் செயற்படும் சமய அமைப்புகளுக்கு தி. தி. தே. என்றும் உதவிக்கரம் நீட்டும்என்று கூறினார், இந்து சமயத்தைப் பற்றிய தவறான கருத்துக்கள் பொது மக்களிடையே எங்கேனும் நிலவினால் அவற்றை களைய வேண்டியது சமயச் சான் றோர்களின், சமூக அமைப்புக்களின் தலையாய கடமையாகும் என்று மேலும் தம் உரையில் குறிப்பிட் டார். இவ்விழாவில் இவ்அறக்குழு வின் பொதுச்செயலர் திரு. டி. கோபால் கிருஷ்ணன், தலைவர் ஜே. கல்யாண சுந்தரம் ஆகியோரும் பங் கேற்று உரையாற்றினர். இவ்விரு நாட்களின்போது இந்நிகழ்ச்சிக்காக கூடிய பக்தர்கள் கூட்டத்திற்கு இல வசமாக உணவு வழங்கிடும் பணி யினைச் சென்னையைச் சார்ந்த காகிதத் தொழிலதிபர் திரு. டி. கே. நரசிம்மன் அவர்கள் மேற்கொண் டார்.

ஃ ஃ ஃ



கணேச உத்ஸவம் :

கர்னாடக மாநிலம் கோலாரில் 24-8-90 முதல் 29-8-90 வரை ஸர்வ ஜனிக கணேச உத்ஸவம் ஸ்ரீ சுவாமி ஹரிஹரானந்தா சரஸ்வதி அவர் களின் தலைமையில் வெகுச் சிறப் பாக நடைபெற்றது.

மந்த்ராலயத்தில் ஸ்ரீ ராகவேந்திர சுவாமியின் ஆராதனை விழா 7-8-90 முதல் 10-8-90 வரை வெகுச் சிறப் பாக நடைபெற்றது. இதுபோது தி. தி. தேவஸ்தானம் சமய நூல் காட்சி மற்றும் விற்பனை அங்காடி ஒன் றினைத்திறந்துவைத்தது. சுமார் ரூ. 14,000 பெறுமான சமய நூல்களை பக்தர்கள்வாங்கிப் பயனடைந்தனர்.

ஃ ஃ ஃ

சென்னையைச் சார்ந்த திரு. ராம சாமி உடையார் எனும் தொழிலபதி பர் அண்மையில் திருமலைக் கோயில் ஸ்ரீ வேங்கடேஸ்வர சுவாமிக்கென ரூ. 7.5 இலட்சம் பெறுமான வைர மாலை ஒன்றினை அன்பளிப்பாக அளித்துள்ளார்.

ஃ ஃ ஃ

கர்னாடக மாநில உயர்நீதி மன்றத் தின் தலைமை நீதிபதி திரு. மோகன் அவர்கள் 4-8-90 அன்று திருமலைக்கு வருகை புரிந்து இறைவனைத் தரிசித் தார்.

ஃ ஃ ஃ ஃ

EDITED AND PUBLISHED ON BEHALF OF THE T. T. DEVASTHANAMS BY K. SUBBA RAO, M.A. AND PRINTED AT T. T. D. PRESS BY M. VIJAYAKUMAR REDDY MANAGER, T. T. D. PRESS, TIRUPATI-517501.

